

# Grand Patriarch

"In the demise of respected Rajaji we have lost an elder statesman and a grand patriarch who had adorned many positions in our national life with dignity and distinction.

"It has been my privilege to have known him from 1916 and I had the privilege of working as his close associate and colleague in the Madras Cabinet.

"Till very recently, despite his very advanced age, he has been expressing his views on many national and international issues with clarity to the advantage of the nation.

"Possessing an uncanny knack of expressing his views with precision, esteemed Rajaji took upon himself many causes which received the attention of even those who may not have agreed with his viewpoints.

"A great personage that he was, he played a crucial role in India's freedom movement and he was indeed a farsighted statesman, the like of whom we will not be able to see for generations.

"As Prime Minister of Madras from 1937 to 1939, a Minister in the Central Cabinet, Governor of West Bengal, Governor-General of India, and finally as Chief Minister of Madras he made a deep impact in the different offices he held by his originality and clear perception.

"A multi-dimensional personality, Rajaji contributed to various fields of human endeavour. The nation has, indeed, become poorer by his demise."

—PRESIDENT V. V. GIRI

# ராஜாஜியின் மறைவு

———0—0—0———

உலகம் நிறைந்த புகழாளரும் உலகம் போற்றுங் குணசீலருமான **ஸ்ரீமான் C. ராஜகோபாலாசாரியார்** 25—12—72 திங்கட்கிழமையன்று மாலை மண்ணுலகை நீத்து விண்ணுலகமெய்தின செய்தியை மிக்க வருத்தத்துடன் தெரிவிக்கிறோம். “நர: பதிதகாயோபி யச:காயேந ஜீவதி” என்ற வசனப்படி புகழுடம்புடனே நீண்டகாலம் வாழ்பவர் இவரொருவரே யாவர். “தோன்றில் புகழொடு தோன்றுக, அஃதிலார் தோன்றலில் தோன்றாமை நன்று” என்ற குறளை நினைவூட்டும் பெரியார் இவர். நமது பரதகண்டத்தில் மட்டுமன்றியே ஏனைய பல கண்டங்களிலும் பிற தீவுகளிலும் புகழ்மிக்க பெரியார் இவர். எந்த நாட்டிலுள்ள எப்பெரியார்களும் சென்னைக்கு வந்தால் இவரைக் கண்டு பேசிக் களியாமற் போவதில்லை.

இப் பெரியார் ஆங்கிலத்திலும் தமிழிலும் எழுதிய சீரிய நூற்கள் பலப்பல. தமிழில் வியாசர் விருந்து என்னும் பெயரால் மஹா பாரதத்தின் தரும நுட்பங்களையெல்லாம் மிக எளிய நடையில் எழுதி வெளியிட்டுள்ளார். வான்மீகி ராமாயணத்தையும் அப்படியே. இங்ஙனம் எண்ணிறந்த பிரசுரங்களை உலகுக்கு உதவியவர்.

இப்பெரியாருடைய ஈமச்சடங்குகள் சிறந்த வைதிக முறையில் நடைபெற்றன வென்பதை விசேஷித்துக் குறிப்பிடுகிறோம். ஹாஸ்பிடலில் உயிர் நீத்தபின் ராஜாஜி ஹாலுக்குக் கொண்டுபோகையில் வைதிகப் பெரியார்கள் பலர் கூடி ஸ்தோத்ரபாட கோஷ்டிகளையும் வேதபாராயண கோஷ்டிகளையும் நடத்தினார்கள். அன்றிரா முழுதும் ஹாலில் உபயவேத கோஷங்கள் மலிந்திருந்தன. பல லக்ஷக்கணக்கான கூட்டங்கள் வந்து குவிந்தன. இந்த சரம கைங்கரியங்களை அவருடைய குமாரர் முன்னின்று நடப்பித்தது குறிப்பிடத்தக்கது.

எங்கும் சாந்தி யுண்டாகுக.

P. B. Annangaracharya
பத்திராதிபர்

கள் மூவரே ஸேவிக்க அநுபவித்தேன். சிற்சில வருடங்களில் நால்வர் ஸேவிக்க அநுபவித்ததுண்டு. இவ்வாண்டில் எண்மர் ஸேவிக்கக் கண்குளிரக் கண்டு களிக்கப் பெற்றேன். இப்போது பெரிய அரையர்ஸ்வாமி யெனவழங்கப்படும் ஸ்ரீமதுபயவே. சடகோபாசாரியர் ஸ்வாமி தமது திருக்குமாரர்கள் நால்வரையும் *தம்மையேயொக்க அருள் செய்திருப்பதால் அந்த திவ்யகோஷ்டியில் அந்வயிக்கும் பாக்கியமுடையார் அனை வரும் பேரின்ப வெள்ளத்து ஆழ்ந்திருப்பர்களென்பதில் ஐயமில்லை.

திருமொழித் திருநாளென்கிற பகற்பத்தில் சிலநாட்களில் பிற்பகலில் இரண்டாம் ஸேவையென்று நடைபெறுவதில்—கம்ஸவதம், வாமநாவதாரம், அம்ருதமதனம், முத்துக் குறி, ராவணவதம் என்னுமிவை, இவற்றை முதன்முதலாக ஏற்படுத்திய அரையர் ஸ்வாமிகளின் அப்ரதிமமான சாதுர்யத்தையும் பாண்டியத்தையும் ராஸிக்யத்தையும் விளக்குகின்றன. தாளத்துடன் அருளிச்செயல் ஸேவிப்பது, ஒவ்வொரு நாளும் சில பல பாசுரங்களை அபிநயிப்பது, வியாக்கியானம் ஸேவிப்பது இவையெல்லாம் * ஊடுபுக்கு எனதாவியை உருக்கியுண்டிடுகின்றன வென்று விஜ்ஞாபித்து நிற்கிறேன்.

## அத்விதீயமான த்விதீயானந்தம்

கோயிலில் முதலதான ஆனந்தத்தை யறிவித்தேன். இனி இரண்டாமானந் தத்தை யறிவிக்கிறேன். இது த்விதீயமெனினும் அத்விதீயமே. ஸ்ரீமதுமயவே. (புத்தூர் வக்கீல ஸ்வாமி) S. கிருஷ்ணஸ்வாமி ஐயங்கார் ஸ்வாமியின் திருத்தகப்பனுர் உபக்ரமித்த ஸ்ரீவைஷ்ணவ ஸுதர்சன பத்ரிகைக்கு இருபத்தைந்தாமாண்டு நிறைவுவிழா (ரதஜ மஹோத்ஸவம்) 6-12-72 முதலாக 13-12-72 வரை எட்டு நாட்கள் கோயில் மேலைச் சித்திரை வீதியில் பூர்வசிகா ஸ்ரீ வைஷ்ணவ மஹா பவனத்தில் வெகு சிறப்பாக நடை பெற்றது. இவ்வெட்டு நாட்களிலும் பிற்பகல் 4 மணியிலிருந்து 6 மணி வரைக்கும், மறுபடியும் (இரவு) 8 மணியிலிருந்து 10 மணி வரையி லும் அணியரங்கனடியார் தங்க ளின்பமிகு பெருங்குழு கூடியிருந்து குளிர அனேக வித்வான்களின் உபந்யாஸங்கள் நடைபெற்றன.



(அதன் சுருக்கம்)

ஸ்ரீவைஷ்ணவ ஸுதர்சந பத்ராதிபஸ்வாமி ஒவ்வொரு வேளையிலும் உபக்ரமத்தில் இனிய அமுதமொழிகளைப் புகழ்ந்து வந்தார். அடியேன் ஸ்ரீவைஷ்ணவ ஸுதர்சநம் என்கிற அக்ஷரக்ரமத்தில் ஸ்ரீரங்கநாதன் விஷயமாகவும் ஸ்ரீஸுதர்சநாழ்வான் விஷய மாகவும் ஆழ்வாரெம்பெருமானுர் மணவாளமாமுனிகள் விஷயமாகவும் விஜ்ஞாபித்தேன். ஸ்ரீமதுபயவே. வாகம்ருதவர்ஷி. வேளுக்குடி வரதாசாரியர் ஸ்வாமி திருமந்த்ரார்த்தம்,

# ஸ்ரீராமாநுஜன்—291



சென்னை ஸத்க்ரந்த ப்ரகாசன ஸபா மூலமாக மாதந்தோறும்
வெளிவரும் பத்திரிகை.

ஆசிரியர்: *ஸ்ரீகாஞ்சீ. P. B. அண்ணங்கராசாரியர்.*



| | | |
|---|---|---|
| ஸம்புடம் 25 | பரிதாவி௵ மார்கழி௴<br>10—1—73ல் வெளியிடப்பட்டது | ஸஞ்சிகை 3 |



## திருவரங்கம் பெரியகோயில்

எம்பெருமானார் ஸ்ரீ வைகுண்ட கத்யத்தின் முடிவில் "அம்ருதஸாகராந்தர் நிமக்நஸர்வாவயவஸ் ஸுகமாஸீத" என்றருளிச்செய்கிறார். அமுதக் கடலினுள்ளே ஆழ்ந்த ஸகலாவயவங்களையு முடையனாயிருக்கக்கடவன் என்பது இதன் பொருள். இது ஸ்ரீ வைகுண்டகத்ய ஸ்ரீஸூக்தி யாகையாலே திருநாட்டில் இப்படியிருக்க ப்ராப்தமானால் அது வியப்பன்று. நம்மாழ்வாரும் திருவாய்மொழியில் *கங்குலும் பகலும் பதிகத்திற்குப் பயனுரைக்கும் பாசுரத்தில் "முகில்வண்ண வானத்து இமையவர் சூழவிருப்பர் *பேரின்பவெள்ளத்தே*" என்றருளிச் செய்தார். அப்பாசுரத்தை யடியொற்றியே ஸ்வாமி யெம்பெருமானார் * அம்ருதஸாகராந்தர்நிமக்நேத்யாதி (கீழே காட்டிய) ஸ்ரீஸூக்தியை யருளிச்செய்தார். விண்ணுலகில் கிடைக்கவிருக்கு மிவ்விருப்பு இம்மண்ணுலகிலேயே ப்ராப்தமாகப் பெற்றேனடியேன் திருவரங்கம் பெரிய கோயிலில். சென்ற கார்த்திகை யமாவாஸ்யையன்று (இரவு) அழகிய மணவாளன் திருமுன்பே தொடங்கும் திருநெடுந்தாண்டக ஸேவை முதலாகப் பத்துநாள் அமுதக் கடலினுள்ளே பேரின்ப வெள்ளத்தில் ஆழ்ந்திருந்தேன். இத் திருவத்யயன மஹோத்ஸவத்தை இளமை தொடங்கியே ஸேவித்து வந்தவடியேன் நாற்பத்தோராவது ஸம்வத்ஸரமாக இப்போது ஸேவிக்கப்பெற்றேன். இம்மஹோத்ஸவத்தில் மிக விரும்பி மிக்க குதூஹலத்துடன் ஸேவிக்கத் தக்கது அரையர் ஸேவையன்றோ. கீழ்ப்பல வருஷங்களில் அரையர் ஸ்வாமி

ஸீதாஸாரம், சரமச்லோகார்த்தம் த்வயார்த்தம் என்னும் விஷயங்கள்பற்றி உபந்யஸித்தார். ஸ்ரீ உவே. தி. அ. சதாபிஷேக கோவிந்த நரஸிம்ஹாசார்ய ஸ்வாமி அபிநந்தன விசேஷங்களை அபிநந்தநீயமாக உபந்யஸித்தார். ஸ்ரீ உவே. அத்யாபக பாஷ்யமையங்கார் சில விசேஷார்த்தங்களை உபந்யஸித்தார். ஸ்ரீமதுபயவே. தி. அ. அக்காரக்கனி (திருநாராயணபுரம்) ஸம்பத்குமாராசாரியர் ஸ்வாமி ஸ்ரீ விஷ்ணுபுராண ப்ரபாவ விசேஷங்களையுபந்யஸித்தார். ஸ்ரீ உவே. திருக்கண்ணபுரம் கனபாடி சௌரிராஜய்யங்கார் ஸ்வாமி வேதார்த்த ரஹஸ்யங்களை உபந்யஸித்தார். ஸ்ரீ உவே. மதுரை R. கண்ணன் ஐயங்கார் ''புரா ஸூத்ரைர் வ்யாஸ:'' என்கிற சுலோகத்தின் ஆழ்பொருளை உபந்யஸித்தார். ஸ்ரீ உவே. திருநாங்கூர் பிரதிவாதி பயங்கரம் ஸ்ரீநிவாஸாசாரியர் (வாஸு) ஸ்வாமி திருவாழியாழ்வான் பெருமையை உபந்யஸித்தார்.

இடையில் ஐந்தாவது நாளில் (10–12–72) இரவு 8 மணி தொடங்கி ஸ்ரீகோச ஆவிஷ்கார மஹோத்ஸவம் பேரின்ப வெள்ளமாக நடைபெற்றது. ஸ்ரீவை. ஸு. பத்ராதிப ஸ்வாமி அச்சிட்டிருந்த ஸித்தோபாய விஜயாந்தமான சில ஸ்ரீகோசங்களையும் அடியேன் பதிப்பித்திருந்த ஸ்ரீ விஷ்ணு சித்தீய ஸஹிதமான ஸ்ரீ விஷ்ணுபுராணத்தையும் பற்றி முன்னம் இரண்டுமணி காலம் ப்ரஸ்தாவநோபந்யாஸங்கள் நடைபெற்று, 10 மணிக்குமேல் இந்த ஸ்ரீகோசங்களை யெல்லாம் ஸன்னிதி கஜேந்திராழ்வான் முடிமீது வைத்து ஸ்தோத்ரபாட கோஷ்டியுடனே பெரிய திருவீதி வலம் வந்த அதிசயம் வாசாமகோசரம். கஜேந்திராழ்வான்மீது வீற்றிருந்தவர் ஸ்ரீ உவே. வித்வான் சதாபிஷேகாசார்ய ஸ்வாமி.



அன்றைய உபந்யாஸ கோஷ்டியில் அடியேன் ஆனந்த மிகுதியினால் ஸ்ரீ வைஷ்ணவ ஸுதர்சன பத்ராபதிப ஸ்வாமிக்கு ''திவ்யார்த்த ரத்னநிதி'' என்கிற விருதையும், அவருடைய திருத்தம்பியாரான உவே. ராமஸ்வாமி ஐயங்காருக்கு ''உத்தம குண சீல:'' என்கிற விருதையும் ஸமர்ப்பித்து ஸத்தை பெற்றேன். அதை ஸபையோர்களனைவரும் கரகோஷத்துடன் அபிநந்தித்து, ஏற்றுக்கொள்ளும்படி இருவரையும் வேண்டிக்கொண்டனர்.

அடியேனுடைய வாழ்நாளில் இவ்வானந்தானுபவம் ஸத்யமாக அத்விதீயமே.

## ஆப்தர்களுக்கு அறிவிப்பு

பல வருடங்களுக்கு முன்பு (அதாவது 1946–ஆம் வருடத்தில்) *பரமார்த்த ரக்ஷா* என்றொரு பெரிய புத்தகம் வெளியிட்டிருந்தோம். அதில் பத்தெட்டு வியாஸங்கள் வெளிவந்தன. அப்புத்தகம் ஏழெட்டு வருஷமாகவே துர்லபமாய் விட்டது. அதில் முக்கியமான ஒரு விஷயத்தை பல ஆப்தர்கள் அடிக்கடி விரும்பி நமக்கு தெரிவிப்பதால் அன்னவர்களின் திருப்திக்காக அந்த வியாஸம் மறுபதிப்புப் செய்யப்படுகிறது. இது யாவர்க்கும் பரம த்ருப்தி பயக்கும்.

# பெரியாழ்வார் திருமகள்

*(ப்ர. அ,)*

த்ரிவேணி யென்கிற ஆங்கில பத்திரிகையின் 1946ஞு ஸெப்டம்பர்மீ வெளி யீட்டில் 'ஆண்டாள் யார்?' என்று மகுடம் புனைந்தவோர் வியாஸம் வெளிவந்துள்ளது. அதை யெழுதினவர் C. R. என்று இவ்வளவே காண்கிறது. ஆண்டாள் யார்? என்கிற வினாவுக்கு எவ்விதமான விடை யிறுக்கப்பட்டு முடிந்திருக்கிற தென்னில்; ஆண்டாள் பெரியாழ்வாருடைய நிஜ புத்திரியுமல்லள், வளர்த்த புதல்வியுமல்லள்; ஆண்டா ளென்று ஒரு வ்யக்தி இருந்ததே கிடையாது; ஆழ்வார்கள் தங்களுடைய ஆண் தன்மையைவிட்டுப் பெண் தன்மையை யடைந்து பேசுகிற முறைமையும் ஒன்று உண்டா தலால் இந்த முறைமையைக் கைப்பற்றின பெரியாழ்வார் தம்முடைய மனோ பாவனை யையே ஒரு பெண்ணாக வைத்துப் பேசியிருக்கிறார். இது காவிய மனோபாவத்தின் கற்பனை யாகும்.—என்கிற இதுவே மேற்குறித்த ஆங்கில வியாஸத்தின் தேறின தாற் பர்யம். இது C. R. என்பவருடைய தமது கற்பனையல்ல வென்றும், தம்முடைய மதிப்புக்குரிய பாத்திரமான ஒரு நண்பரின் அபிப்பிராயமென்றும் தெரிவிக்கப்பட் டிருக்கிறது.

இது யாருடைய அபிப்ராயமானாலென்ன? சில வருஷங்களுக்கு முன்பு ஒரு தமிழ்ப் பத்திரிகையிலேயே இவ்வபிப்ராயம் வெளிவந்திருந்ததாகவும் நாம் சில நண்பர் முகமாகக் கேள்விப்படுகிறோம். இவ்வபிப்ராயம் சிறிதேனும் பொருத்தமுடையதாக இருக்கவில்லையே. இதன் தத்துவத்தைப் பலர் அறிய விரும்புவதால் இங்கு இதைப்பற்றி நாம் விவரிக்கின்றோம்.

நம்மாழ்வாரும் திருமங்கை யாழ்வாரும் தங்களுடைய பக்திப் பெருங்காதல் புறவெள்ளமிடப் பெற்று அதனால் ஆண்மையை யிழந்து பெண்மையை யெய்தித் தாய் பாசுரமாகவும் மகள் பாசுரமாகவும் தோழி பாசுரமாகவும் பேசி இருப்பது உண்மையே.

அப்படிப் பேசுமிடங்களில் பதிகத்தை முடிக்கும்போது "குருகூர்ச் சடகோபன் சொன்ன" என்றும், "பரகாலன் கலியன் சொன்ன" என்றும் ,தம்முடைய சொந்த வாக்காகவே முடிப்பதுதான் காண்கிறது. அதனுல் அப்பதிகத்தில் கூறப்பட்டவர் ஆழ்வாரே யென்பது தேறும்.

இதே வகையில் பெரியாழ்வாரும் தம்முடைய சொந்தப் பிரபந்தமான [பெரியாழ்வார் திருமொழியென வழங்கும்] திவ்வியப் பிரபந்தத்தில் இரண்டு பதிகங்கள் பாடியுள்ளார். அவை மூன்ருவது நூறில் 7, 8 பதிகங்களாகும். அவை யிரண்டும் தாய்ப்பாசுரமாகவே பேசியவை. அவற்றில் பெரியாழ்வார் மகளாக வைக்கப்பட்டு அம்மகளினது ஈடுபாட்டைத் தாய் சொல்லி முறையிடுவதாக அமைத்திருக்கிறது. அவற்றுள் முதற் பதிகம் "ஐயபுழுதி யுடம்பளைந்து இவள் பேச்சு மலந்தலையாய்" என்று தொடங்குவது. இரண்டாவது பதிகம் "நல்லதோர் தாமரைப் பொய்கை நாண்மலர்மேல் பனிசோர. அல்லியுந் தாதுமுதிர்ந்திட்டு அழகழிந்தாலொத்ததாலோ, இல்லம் வெறியோடிற்ருலோ என்மகளை யெங்குங் காணேன், மல்லரை அட்டவன் பின்போய் மதுரைப்புறம் புக்காள் கொலோ" என்கிற பாசுரம் தொடங்கியுள்ளது. 'எனது மகள் என் வீட்டைவிட்டு எம்பெருமான் பின்னே போய்விட்டாள்போல் தெரியவருகிறது' என்று இதில் கூறப்படுகிறது. இப்பதிகத்திலேயே நான்காவது பாசுரம்—"ஒரு மகள் தன்னையுடையேன் உலகம் நிறைந்த புகழால் திருமகள் போல வளர்த்தேன் செங்கண்மால்தான் கொண்டு போனன்" (3-8-1) என்பதாம்.

இப் பாசுரங்களை நோக்குமிடத்து, பெரியாழ்வார் தம்முடைய ஒரு பெண்பிள்ளையின் செய்தியை எடுத்துக் கூறுவதாக மேலெழுந்த பார்வையில் தோன்றும். இப்படியே உண்மையாகச் சிலர் க்ரஹிப்பதுமுண்டு. '* ஒருமகள் தன்னை யுடையேன் என்று பெரியாழ்வார் தாமே தமக்கு ஒரு பெண் இருந்ததாகவும் அவளைச் செங்கண்மால் கொண்டு போனதாகவும் கூறுகிருர்' என்று ஹரிகதா காலக்ஷேபகாரர்கள் சிலர் கூறுவதுமுண்டு. இது மிகவும் தவருன கொள்கை. ஏனெனில்; இங்கு மகள் என்று சொல்லுவது ஸ்த்ரீ பாவனையை யடைந்த பெரியாழ்வாரையே யல்லது ஆண்டாளையன்று. ஆண்டாளைப்பற்றின ப்ரஸ்தாவம் அந்தப்பதிகங்களில் இல்லை. மேலே விவரித்த கொள்கையை த்ரிவேணியில் காணும் வியாஸம் கண்டிக்க எழுந்ததாகில் நாமும் அதில் சேர்ந்துகொள்ளுகிரேம்.

இங்குச் சிலர் கேட்கக்கூடும். ஆண்டாளென்ரெரு வ்யக்தி இருந்ததேயில்லை யென்று C. R. என்பவர் சொன்னுலும், பெரியாழ்வார் மகளாக ஆண்டாள் இருந்ததாகவே ஸித்தாந்த மாதலால் "ஒருமகள் தன்னையுடையேன்" என்கிற பாசுரமானது அத்திருமகளை நோக்கியே அவதரித்ததென்று கொண்டாலென்ன ? பெரியாழ்வார் தம்முடைய பக்தியை வெளியிடுதல் போலவே தம்முடைய மகளின் பக்தியை வெளியிடவும் ப்ராப்தமாகையாலும், உண்மையில் தமக்கு பரமபக்தியே வடிவெடுத்த புதல்வியொருத்தி இருக்கிறபடியாலும் அவளைப்பற்றியே "ஒருமகள் தன்னையுடையேன்" என்கிற பாசுரம் அவதரித்ததாகக் கொண்டால் பிசகு என்ன என்று கேட்கக்கூடும்.

இதற்குச் சொல்லுகிரேம் கேண்மின். இப்பதிகத்தின் முடிவு பாசுரம் எங்ஙனே யுள்ளதென்று பார்க்க வேணும். "தாயவள் சொல்லிய சொல்லைத் தண்புதுவைப்

பட்டன் சொன்ன '' என்றன்றே வுள்ளது' தாய்ப் பாசுரமாக வைத்துப் பெரியாழ்வார் தமது நிலைமையைத் தாம் பாடின பதிகம் என்றே இதற்குப் பொருளாதலால் இப்பதிகத்திலும் இதன் முற்பதிகத்திலும் பெரியாழ்வாரே மகளாகவைத்துப் பேசப்பட்டிருக்கின்றரேயல்லது ஆண்டாளைப்பற்றின ப்ரஸ்தாவமே இங்குக் கிடையாதென்பது நிஸ்ஸந்தேஹம். த்ரிவேணி பத்ரிகையின் வியாஸம் இவ்விஷயத்தையெடுத்து விளக்கி யிருக்குமாயின் மிக நன்றும். உலகமெலாம் இதை மெச்சும். ஆண்டாளுடைய பாசுரங்களாகத் திருப்பாவையென்றும் நாச்சியார் திருமொழியென்றும் இரண்டு திவ்வியப் பிரபந்தங்கள் பிரசித்தமாயிருக்க, அவற்றினுட்புகுந்து விஷய மருமங்களைச் சிறிதும் நோக்காமல் ஆண்டாளென்றொரு வ்யக்தியே இருந்ததில்லையென்றால் இதற்கு அர்த்தமுண்டோ?

திருப்பாவையின் முடிவு பாசுரத்தில் ''பட்டர்பிரான் கோதை சொன்ன'' என்றுள்ளது. அடுத்த நாச்சியார் திருமொழியின் பதினன்கு பதிகங்களிலும் முடிவில் ''விட்டுசித்தன் கோதை சொன்ன'' ''குழற்கோதை கூறிய'' ''சுரும்பார் குழற் கோதை தொகுத்துரைத்த'' ''வில்லைத் துலைத்த புருவத்தாள் வேட்கையுற்று மிக விரும்புஞ்சொல்'' என்றிங்ஙனே கூறி முடித்திருப்பதால் தனியே கோதை யென்றொரு பெண்மணி யிருந்தே தீரவேண்டும். இங்குப் பிறர் என்ன சொல்லக்கூடு மென்னில், திருப்பாவை யென்றும் நாச்சியார் திருமொழி யென்றும் இரண்டு பிரபந்தங்கள் இருப்பது வாஸ்தவமே; இவையும் பெரியாழ்வார் தாமே பாடியவை என்கிறோம்—என்று சொல்லக் கூடும். இது பொருந்தாதென்பதை நிரூபிக்கிறோம். பெரியாழ்வார் பாடியவை இரண்டு பிரபந்தங்களென்றும் ஆண்டாள் பாடியவை இரண்டு பிரபந்தங்களென்றும் உள்ள வ்யவஹாரத்தைத் தள்ளி, பெரியாழ்வாரருளியவை நான்கு பிரபந்தங்கள் என்று கொள்ள வேணுமென்பதே பிறருடைய கொள்கையென்று தேறி நிற்கும். பெரியாழ்வார் திருப்பல்லாண்டிலும் அதற்கடுத்த திருமொழியிலும் பதிகந்தோறும் ''விட்டுசித்தன் சொன்ன மாலை'' ''பட்டர்பிரான் சொன்ன பாடல்'' என்றே கூறிவைத்து, திருப்பாவையிலும் நாச்சியார் திருமொழியிலும் அங்ஙனங் கூறுது ''பட்டர்பிரான் கோதை சொன்ன'' ''விட்டுசித்தன் கோதை சொன்ன'' என்றிப்படி கூறினது வஞ்சனையின் பாற்படுமஅன்றே. இக்குற்றத்திற்கு ஆளாகார் பெரியார். பெரியாழ்வாரே பாவனையின் கனத்தாற் பெண்மை யெய்தி இவை பாடினரென்னில், பிறவிடங்களிற் போலப் பட்டர்பிரான் பாடலாகவும் விட்டுசித்தன் சொல்லாகவுமே நிகமனப் பாசுரம் அமையுமே யல்லது ''சுரும்பார் குழற்கோதை தொகுத் துரைத்த'' என்றும் ''வில்லைத் துலைத்த புருவத்தாள் விரும்பிய சொல்'' என்றும் இவ்வகைகளிலேயே அமைந்திருப்பது பொருந்தாது. பெரியாழ்வாரே இப்படி மாறுபாடாக அமைத்தாரென்னில் அவரை வஞ்சனைக் குற்றத்திற்கு ஆளாக்க வேண்டியே வரும்.

நாச்சியார் திருமொழியினுட் புகுந்து நோக்குவோமாயின், பெரியாழ்வாரிற் காட்டில் வேறுபட்ட ஆண்டாள் என்னும் வ்யக்தி உள்ளபடி உண்டென்பது ஸ்பஷ்டமாகப் புலப்படும். மூன்றிடங்களெடுத்துக் காட்டுகிறோம். அத்திருமொழியில் (10-4.) ''கொல்லையரக்கியை மூக்கறிந்திட்ட குமரனர், சொல்லும் பொய்யானல், நானும் பிறந்தமை பொய்யன்றே'' என்றொரு பாசுரமுள்ளது. இதற்குப் பூருவாசாரியர்கள் என்ன பொருள் கூறியிருக்கிறார்களென்று தெரிந்துகொள்ள விரும்பி அவர்களது வியாக்கியானங்களை நாம் தேடவேண்டாம். வெறுந் தமிழர் முறையில் நாமே பார்ப்போம். இப் பாசுரத்திற்கு என்ன பொருள் சொல்லத் தகுமென்று ஒவ்வொரு தமிழரும் பார்க்கலாம். ''நானும் பிறந்தமை பொய்யன்றே'' என்றவளவுக்குப் பொருள் உணரவேணும். விபீடணனை நோக்கிப் பெருமாள் கடற்கரையிலே அபயமளித்தது அவனெருவனுக்கேயன்று; அவனை வியாஜமாகக்கொண்டு அவதரித்த சரமச்லோகமானது பக்தர்களெல்லாரும் தேறியிருப்பதற்குப் பாங்காகும். ஒருகால் அந்த வார்த்தை, பொய்யாக ஆய்விட்டாலுங்கூட [அதாவது, அவ்வழியால் பேறு தவறினலுங்கூட] ***நானும் பிறந்தமை***

*பொய்யன்றே*=நான் ஒரு மஹா பாகவதருடைய பெண்ணாய்ப் பிறந்திருக்கிறேனே; இப்பிறப்பு பொய்யாகமாட்டாதே: [அதாவது, இவ்வழியாலே பேறு தவறிப் போகமாட்டா தன்றோ] என்பதே இவ்விடத்திற்கு ஏற்ற பொருளாகும். இப்பாசுரத்தைக் கொண்ட பதிகத்தின் இறுதிப் பாசுரமும் இப்பொருளையே வற்புறுத்தும். அப்பாசுரமும் முக்கிய மானதாகையால் அதனையும் விவரிக்கிறோம்:

> "நல்லவென் தோழி நாகணை மிசை நம்பார், செல்வர் பெரியர் சிறுமானிடவர் நாம் செய்வதென்?
> வில்லிபுதுவை விட்டுசித்தர் தங்கள் தேவரை, வல்லபரிசு வருவிப்பரேல் அதுகாண்டுமே."

இதன் தாற்பரியமாவது, என்னிழவுக்கு என்னைக் காட்டிலும் முன்னம் நோவுபடுகின்ற தோழியே! பராத்பரரான எம்பெருமான் ஒருவர்க்கு மெட்டவொண்ணாத பெருமையை யுடையராயிருப்பர்; நானோ 'நீசனேன் நிறையொன்றுமிலேன்' என்னும்படி சிறுமைக்கு எல்லை நிலமாயிருப்பவள். அவர்க்கும் எனக்கும் பர்வத பரமாணுக்களோட்டைவாசி போந்திருக்குமான பின்பு அவரைப் பெறுதற்கு நம்மாற் செய்யலாவதுண்டோ? ஆனாலும் எனக்குப் பேற்றுக்கு வழியுண்டுகாண். ஸர்வ வ்யாபகனான அப்பெருமானைத் தம் திருவுள்ளத்திலே யடக்கிக்கொண்டு அதனால் விஷ்ணுசித்தரென்று விருதுவஹிக்கும் நமது பெரியாழ்வார் தமக்குத் தேவராயிருக்கிற அப்பெருமானை ஓரிசையைச் சொல்லி யழைக்கவுமாம்; கிழியறுத்து வரப்பண்ணவுமாம்; திருமஞ்சனத்தைச் சேர்த்து வைத்து 'நாரணா! நீராட வாராய்' என்றழைக்கவுமாம்; திருக்குழல் பணியைச் சமைத்து வைத்துக் குழல்வார வாராய் என்றழைக்கவுமாம்; பூச்சூட வாராய் என்றழைக்கவுமாம்; திருவந்திக் காப்பிடவழைக்கவுமாம்; தமக்குப் புருஷகாரமானாரை முன்னிட்டு வரப் பண்ணவுமாம்; ஏதேனுமாக, அவர்க்கு ஸாத்யமான வொருவகையாலே வருவித்தா ராகில் அவ்வழியாக அப்பெருமானை ஸேவிக்கப் பெறுவோம்; நம்முடைய சிறுமை காரணமாக நாம் இழக்கவேண்டியதில்லை; நமக்கு ஆசிரியரான பெரியாழ்வாருடைய வலிமையினால் நாம் பெற்றே தீருவோம்—என்பதாம்.

அன்றியும் (11-10) "செம்மையுடைய திருவரங்கர் தாம் பணித்த மெய்ம்மைப் பெருவார்த்தை *விட்டுசித்தர் கேட்டிருப்பர்*" என்கிற பாசுரமும் முக்கியமாகக் குறிக்கொள்ளத்தக்கது. எம்பெருமான் அர்ஜுந வ்யாஜத்தாலே திருத்தேர்த் தட்டிலே நின்றருளிச்செய்த யதார்த்தமான * *மாமேகம் சரணம் வ்ரஜ* * என்கிற சரம ச்லோக வார்த்தையை எங்கள் பெரியாழ்வார் கேட்டு தந்நிஷ்டராயிருப்பர் - என்பது இதன் பொருள்.

ஆக இப்பாசுரங்களைப் பெரியாழ்வார் தாமே எழுதிவைத்தாரென்னில், இது சிறிதும் பொருந்தமாட்டாதன்றோ. இப்பாசுரங்களை நோக்கின பின்பு கோதை அல்லது ஆண்டாளென்கிற வ்யக்தி தனிப்பட இல்லை யென்கிற வார்த்தை தோன்ற நியாயமில்லை.

ஆங்கில வியாஸத்தின் முடிவில் "இத்தகைய அபிப்பிராயம் தற்காலம் நாஸ்திக வாதம்போல் தோன்றலாம்; [நாஸ்திக வாதமன்று.] பெரியாழ்வார் ஆண்டாள் என்று இரண்டு வ்யக்திகளாகக் கொள்வதைவிட ஒரே வ்யக்தியிடத்தில் இந்த இரண்டு விசே ஷணங்களையும் கொள்வது குறைவா?" என்று எழுதப்பட்டிருக்கிறது. இது சிறிதும் அர்த்தமில்லாத வார்த்தையே. இரண்டு வ்யக்திகளென்று ஐயமின்றி வ்யக்தமாகத் தெரிந்திருக்க, ஒரே வ்யக்தியாகக் கொள்வது பிசகன்றோ. எதைக்கொண்டு ஒரே வ்யக்தியாகக் கூறுவது? கூறுவதற்கு அற்பமான ஆதாரமாவது இருந்தால் கூறலாம். பிரமாணமும் சிறிதுமில்லையே.

ஆழ்வார்களுள் பொய்கையார் பூதத்தார் பேயார் திருமழிசையார் திருப்பாணர் ஆகிய இவ்வைவரது பாடல்களில் இன்னார் பாடியதென்கிற குறிப்பேயில்லாமலிருக் கிறது. நம்மாழ்வாருடைய நான்கு பிரபந்தங்களுள் திருவாசிரியத்திலும் பெரிய

திருவந்தாதியிலும் ஆழ்வார் பெயர் குறிப்பிடப்பெருமலிருக்கிறது. திருமங்கையாழ்வார் பாடிய ஆறு பிரபந்தங்களுள் திருவெழு கூற்றிருக்கையிலும் இரண்டு திருமடல்களிலும் ஆழ்வார் பெயர் குறிப்பிடப்பெருமலிருக்கிறது. இவற்றைக்கொண்டு நவீனர்கள் 'அந்தப் பிரபந்தம் அவர் பணித்ததன்று; இந்தப் பிரபந்தம் இவர் பணித்தன்று.' என்று எதையாவது சொல்லியுமெழுதியும் போந்தால் 'பிரமாணிகர்களான பெரியார் ஏற்றுக் கொள்ளார்' என்கிற ஒரு வார்த்தையோடு முடிக்க வேண்டியிருக்கும். ப்ரக்ருத விவாத விஷயமோ, அப்படிப்பட்டதன்று, ஆண்டாளென்பாள் தனி வ்யக்தியே என்பதற்கு நாம் கீழே காட்டியவை தவிர இன்னமும் பல காட்டுகிருேம்.

ஆண்டாளுடைய அவதார ஸ்தலமான ஸ்ரீ வில்லிபுத்தூர்க்கு நாச்சியார் திரு மாளிகையென்றே பெயர்வழங்கி வருகின்றது. சூடிக்கொடுத்த நாச்சியாரென்று அவளுக்குத் திருநாமமாவதற்கு ஒரு ஐதிஹ்யம் ப்ரஸித்தமானது. அநூ வேதாந்த தேசிகரும் தாமருளிய கோதாஸ்துதியில் பலகாலெடுத்துக் கூறியுள்ளார். பிள்ளைப் பெருமாளையங்காரும் தமது பிரபந்தங்களிற் பேசியுள்ளார். திவ்யஸூரிசரிதம் குரு பரம்பரா ப்ரபாவம் முதலான பல க்ரந்தங்களிலுமுள்ளது. அவ்வைதிஹ்யத்தின்படி நாளைக்கும் அத்தலத்தில் நாடோறும் காலையில் ஆண்டாள் சூடிக்களைந்த மாலையை மேள தாள மரியாதைகளுடன் வடபெருங்கோயிலுடையா னென்னும் பெருமாளுடைய ஸன்னி திக்குக் கொண்டுபோய் ஸமர்ப்பிப்பது முதற் காரியமாக நடைபெற்று வருகின்றது.

ஆண்டாள் தனது திருமொழியில் "மாலிருஞ்சோலை நம்பிக்கு நான் நூறு தடாவில் வெண்ணெய் வாய் நேர்ந்து பராவிவைத்தேன், நூறுதடா நிறைந்த அக்கார வடிசில் சொன்னேன்" என்று கூறியிருந்ததை அப்படியே உண்மையான அனுட்டான மாக நடத்திவைத்து உடனே ஆண்டாளையும் ஸேவிக்க வெழுந்தருளின ஸ்ரீராமாநுஜரை ஆண்டாள் அர்ச்சாவதார ஸமாதியையுங் கடந்து எதிர்கொண்டுவந்து எம் அண்ணரே!, என்று தழுவிக்கொள்ள அன்று முதலாகப் "பெரும்பூதூர் மாமுனிக்குப் பின்னுனாள் வாழியே" என்று உலகமெல்லாம் வாழ்த்த நேர்ந்திருக்கின்றது. "கோதற்ற ஞானத் திருப்பாவை பாடிய பாவை தங்கை" என்ருர் ஆன்ருேரும்.

இப்படி இன்னமும் பல ஹேதுக்களுண்டு. ஆனுல் இவையெல்லாம் ஸ்ரீவைஷ்ண வர்களின் ஒரு ஸங்கேதமான ஐதிஹ்ய வாதங்கள் என்று பிறர் இலேசாகச் சொல்லி விடவுங் கூடும். அப்படிச் சொல்லுமவர்களைத் திருத்த வேணுமென்கிற எண்ணம் நமக்குச் சிறிதுமில்லை. இவ்விஷயங்களில் நம்பிக்கை யுள்ளவர்களுக்குத் தோன்றும் கலக்கங்களைப் பரிஹரிக்கவே நாம் இஃது எழுதினது. ஸ்ரீராமாயணத்தைப் பார்ப்பவர்கள் சிலர் 'ராமனும் அவதரித்ததில்லை, ஸீதையும் அவதரித்ததில்லை; ஸுக்ரீவாதிகளு மில்லை, ராவணுதிகளுமில்லை; நல்ல சில நீதிகளை யுணர்த்துவதற்காகவே ராமாயணம் கற்பனை செய்யப்பட்டது' என்று கூறுமவர்களும் எழுதிவைத்திருப்பவர்களும் உளரன்ருே. அன்னவர்களைப் பற்றி நாம் என்ன செய்ய நினைப்போம்? ஒன்றுமில்லை. "கருவிலே திருவிலாதீர்! காலத்தைக் கழிக்கின்றீரே" என்கிற திருமாலைப் பாசுரத்தையே அநு ஸந்தானஞ் செய்துநிற்போம்.

ப்ரக்ருத விஷயத்தில் ஐதிஹ்யங்களி லொன்றையும் இவர்கள் நம்பவேண்டா. நாச்சியார் திருமொழியிலுள்ள பாசுரங்கள் ஆண்டாளென்கிற வ்யக்தியை அவசியம் ஸ்தாபித்துத்தரும். "நானும் பிறந்தமை பொய்யன்றே" என்று அவள் கூறியிருந்தும் அவள் பிறந்தது பொய்யேயென்று கூறுவதுதான் ஆச்சரியம். * இதனில்மிக்கோரயர் வுண்டே? ... ... ... ... *

ஆண்டாள் திருவடிகளே சரணம்.

ஸ்ரீ:

ஸ்ரீகாஞ்சீ. அண்ணங்கராசாரியர் இயற்றிய

# பரவாதிசிரோபூஷா ஸாரத்திரட்டு

பரவாதிசிரோபூஷா என்னுமிச் சிறுநூலின் பிரமேயத்தை ஸாரமாக எடுத்துரைக்கிறேனிங்கு. இந்த ஸாரத்திரட்டை வாசித்தபிறகு நூலில் கண்ணைச்செலுத்த வேணுமென்று தோன்றினல் 'செலுத்திப் பார்ப்பது. ஸ்ரீமதுபயவே. வித்வான். மதுராந்தகம் வீரராகவாசாரியர் ஸ்வாமி சிலவாண்டுகட்கு முன்பு (ப்லவங்க வருடத்தில்) ஸம்ப்ரதாயஸுதா என்றொரு சிறுநூலெழுதி வெளியிட்டார். அஃது அடியேனுக்கு மிகவும் தாமதித்து கிடைத்தது. கிடைத்த மறுநாளே (ப்லவங்கஹு தைமாதத்தில்) அந்நூலிலுள்ள அபத்தங்களையும் அஸம்பத்தங்களையும் விளக்கிக்காட்டி *ஸம்ப்ரதாய ஸாம்ராஜ்ய* மென்றொரு நூலை ஸ்ரீராமாநுஜனில் வெளியிட்டேன். 229, 230, 235 ஆகிய மூன்று இதழ்களில் அந்த ஸாம்ராஜ்ய நூல் வெளிவந்து உலகம் பரவியுள்ளது. தனிப் புத்தகமாகவும் அது வெளியிடப்பட்டிருக்கின்றது, அதில் பிரபலமான சில சபதங்களையும் வெளியிட்டிருந்தேன். (அதாவது) சில விஷயங்களைக் குறிப்பிட்டு இவற்றுக்கு தேவரீர் ஆர்ஜவத்துடன் விடையிறுத்துவிட்டால் இதுகாறும் நான் நான்கு பாஷைகளிலும் எழுதி வெளியிட்டுள்ள நூல்களையெல்லாம் கிழித்தெறிந்துவிட்டு அஜ்ஜ்ஞாத வாஸம் செய்யக் கடவேனென்று. இப்படி நானெழுதி வெளியிட்டிருப்பதைக் கண்ட அந்த ஸ்வாமி என்ன செய்திருக்கவேண்டும்? சரக்கிருந்தால் உடனே விடையிறுத்து எனது நூல்களையெல்லாம் நானே கிழித்தெறியும்படி செய்திருக்கவேண்டும். கண்ண பிரானுடைய வேணுகான வைபவத்தை யருளிச்செய்யும் பெரியாழ்வார் "அம்பரந்திரியுங் காந்தப்பரெல்லாம் அமுதகீத வலையால் சுருக்குண்டு, நம்பரமன்றென்று நாணிமயங்கி நைந்து சோர்ந்து கைமறித்து நின்றனரே" என்றுரன்றே; அந்தப் பாசுரத்தையே நினைவூட்டி நின்றார் நம் மதுராந்தகம் ஸ்வாமி. ஐம்பத்தொன்பது மாதங்கள் வாளா இருந்துவிட்டு அறுபதாவது மாதத்தில் திடீரென்று ஏதோ நினைத்துக்கொண்டு [உலகம் உறங்குவதாக நினைத்து] தம்முடைய ஸுதா நூல் வெற்றிபெற்று விட்டதாக "ஸுதா... விஜயம்" என்கிறவொரு சிறு சுவடியை வெளியிட்டிருக்கிறார். [என்றைக்கு? 10-12-72ல்]

இடையில், ஸ்ரீமதுபயவே ஸ்ரீவைஷ்ணவ ஸுதர்சன பத்ராதிப ஸ்வாமியோடும் வாகம்ருதவர்ஷி ஸ்ரீ வரதாசார்ய ஸ்வாமியோடும் விவாதங்கொண்ட இந்த மதுராந்தகம் ஸ்வாமி, அவர்களை நோக்கி ஒன்றிரண்டு சிறு சுவடிகளை வெளியிட்டிருப்பதாகத் தெரிகிறது. அவையும் வெற்றிபெற்று விட்டதாகக் காட்டிக்கொள்ளுகிறாரிவரிப்போது. "நம் மதுராந்தகம் ஸ்வாமி வெற்றிபெறும் சுவடி யொன்றையும் எழுதப்பிறந்தாரல்லர்" என்றடியேன் திண்ணமாகத் தெரிவிப்பதைத் திடமாக எண்ணுமின். ஒருநாளும்

மறவேன்மின். போர்வீரரிருவர்க்கு ப்ரபலமான போர் நடக்கையில் அபரிமிதமாக அடிபட்டோடியுய்ந்த ஒரு வீரன் தான் உயிரோடு மீண்டதையே குவாலாகக் கொண்டு "நான் வெற்றிபெற்று விட்டேன்; எதிரியை நையப் புடைத்துவிட்டேன்" என்று பறை சாற்றிக் கொள்வது போல நம் மதுராந்தகம் ஸ்வாமி தாம் ஜீவித்திருப்பதையே கொண்டு தமது சுவடிகள் வெற்றிபெற்று விட்டதாக வெளியிட்டுக் கொள்வதில் வியப்புண்டோ?

இப்போதிவர் வெளியிட்டிருக்கும் சுவடி "ஸுதா நிஷ்கர்ஷ தூஷணீ விஜயம்" என்பது. இதனால் தமது மூன்று சுவடிகள் வெற்றிபெற்று விட்டதாகக் காட்டினுராயிற்று. மூன்றுக்கும் படுதோல்வியேயொழிய ஒன்றுக்கும் சிறிதேனும் வெற்றியில்லையென்பதை விவேகிகள் தாமே உணர்வர்கள். ஸம்ப்ரதாய ஸுதா என்னும் இவரது சுவடி வெற்றிபெற்ற அழகை முன்னம் ஆராய்வோம்.

நாற்றிசைகளிலும் புலவர்கள் நானுவகை நூல்களை யெழுதுகின்றனர், அச்சிடுகின்றனர்; வெளியிடுகின்றனர். அவை பெரும்பாலும் நமது பார்வைக்கு வரும். நாம் ஒவ்வொன்றையும் பார்க்கத் தொடங்கும்போது "இந்நூலாசிரியர் வ்யுத்பந்நர்தானு? இவருடைய வ்யுத்பத்தி எத்தகைத்து? தர்ம தர்மிஜ்ஞான முண்டா இவர்க்கு?" என்று இதையே நாம் முக்கியமாகப் பார்ப்பது. பலர் ஏராளமாகப் படித்திருக்கலாம், விருதுகளும் (டைடல்கள்) பல பெற்றிருக்கலாம். ஆனுல் வ்யுத்பத்தியின் உத்பத்தி மாத்ரமும் அவர்கட்கு இராது. புதுக்கோட்டை கத்வால் வனபர்த்திகளில் வாக்யார்த்தம் சொல்ல வருபவர்களில் பலர் "கடத்வஸ்ய பூதலே வர்த்தமாநாத்" என்றுப்போலே வ்யவஹரிப்பர்களாம். யூயம் வக்தவ்யம் என்றும் கம்பீரமாக ஸாதிப்பர்களாம். ஜோடு சால்வை, 116 ரூ. ஸன்மானம் பெறுவர்களாம்.

நமது மதுராந்தகம் ஸ்வாமியின் வ்யுத்பத்தி பரிஸ்திதியை நாம் வெகு எளிதாகக் கண்டறிந்து காட்டியிருக்கிறோம். அதை நினைக்கும் போதே நமக்கு உண்மையில் அபரிமிதமான வருத்தமுண்டாகிறது. ப்ரமம் ப்ரமாதம் விப்ரலிப்ஸை எனப்படும் புருஷ தோஷங்கள் மூன்றில் இவர்பால் எதைச் சொல்லலாமென்று பார்த்தால் ஒவ்வொன்றும் அஹமஹமிகயா இடம் பெற்றிருப்பதாகவே சொல்லவேண்டியதாகிறது. விஷயம் கேண்மின்.

## சரணுகதி கத்ய - உபக்ரம ஸ்ரீஸூக்தி

எம்பெருமானுர் சரணுகதி கத்யம் தொடங்குகையில் * பகவந்நாராயணேத்யாதி (முதல்) சூர்ணையாலே பெரிய பிராட்டியாரைச் சரணம்புக்கார். உடனே அடுத்த சூர்ணை அருளியிருப்பது *பாரமார்த்தி* கேத்யாதி. இதில் செய்ததென்ன வென்றால், "கைங்கர்ய ப்ராப்த்யபேக்ஷயா பாரமார்த்திகீ பகவச்சரணாரவிந்த சரணாகதிர் யதாவஸ்திதா அவிரதா அஸ்து மே" என்கையாலே கைங்கர்யாபேக்ஷயை முன்னிட்டு அதற்குறுப்பான சரணுகதி நிஷ்பத்தி பிரார்த்திக்கப்பட்டது. இந்த கத்யத்திற்கு

ச்ருதப்ரகாசிகாசார்யரும் ஒரு வியாக்கியான மிட்டருளியிருப்பதால் அதில் கீழே குறித்த இரண்டு சூர்ணேகளின் ப்ரமேயம் சுருக்கியுரைக்கப்பட்டது. அப்படி யுரைத்த ஸ்ரீஸூக்தி யாதெனில்,

"ச்ரியம் ப்ரபத்ய தத்ஸந்நிதௌ மூலமந்த்ரேண ஸ்வரூபாநு ரூப புருஷார்த்த ப்ரார்த்தநம் ததுபாய ப்ரார்த்தநா பர்யந்தம் க்ருத்வா"

என்பது. இங்கு (ததுபாய ப்ரார்த்தநை) என்பதற்கு என்ன பொருளென்னில், கைங்கர்ய ப்ராப்திக்கு உபாயமான சரணுகதி நிஷ்பத்தியின் பிரார்த்தனே என்பது பொருள். தச் சப்தார்த்தம் கைங்கர்ய ப்ரார்த்தனேயே யொழிய பிராட்டியன்று; உபாய ப்ரார்த்தநை யென்பதற்கு உபாயபூத சரணுகதி நிஷ்பத்தி ப்ரார்த்தனேயென்பது அர்த்தமேயொழிய பிராட்டி யிடத்தில் உபாயத்வ ப்ரார்த்தனே என்பது அர்த்தமேயன்று. அது மூலத்தில் ஒரு மூலேயிலாவது இருந்தாலன்றோ அதைக் கொள்ளலாம். (பிராட்டி பக்கலில் உபாயத்வ ப்ரார்த்தனே) என்றுல் என்ன அர்த்தம் ஸ்வாமிந் என்றுல் வாய்திறக்க வழி யுண்டோ? "பாவே த்வதலௌ" என்ற அநுசாஸனத்தின்படி த்வப்ரத்யயமும் இங்கில்லே. பாவ ப்ரதாந நிர்தேசமென்று ஒன்றுண்டு; அதைக் கொள்ளலாமென்றுர் ஒரு மஹா பண்டிதர். முகமஸ்தீதி பாஷணம் தத்,

நம் மதுராந்தகம் ஸ்வாமி "ச்ருதப்ரகாசிகாசார்யர் பிராட்டியின் உபாயத்வத்தை ஸ்பஷ்டமாக அருளிச்செய்தாரிங்கு" என்கிருர். இதை ப்ரம மென்னலாமா? ப்ரமாத மென்னலாமா? விப்ரலிப்ஸை யென்னலாமா? என்று ஒவ்வொருவரும் தடஸ்த வித்வான் களேக் கேட்டுப் பார்க்கலாம். மூன்றினுடையவும் ஸமாவேச மென்றுதான் ஸத்யமாய்ச் சொல்லுவர்கள். ப்ரமித்து விட்டோமந்தோ! என்று அவர்தாமே திண்ணமாக எண்ணி யிருப்பர். ஐயமில்லே. அதஏவ அன்றுமுத லின்றறுதியாக வாயைக் கையைத் திறந்திலர். இந்த ப்ரமத்திற்கு எது மூலமென்னில், அபாதிதமான சாஸ்த்ர வ்யுத்பத்தியில்லாமையே யென்னத் தட்டில்லே. பஞ்ச வாதங்கள் வாசித்தேனென்னுமிவர் இங்ஙனே மருண்டது மிகவியப்பே. இப்படிப்பட்டவர்கள் ஏதோ தளுக்காக வாசிக வ்யவஹாரங்களோடு காலங்கழிப்பது நன்று. எழுதத் தொடங்கும் புதிய அப்யாஸம் விச்ராந்தி பெறுக. இந்த வொரு விஷயத்தில் இவர் நிலேநின்று விடையிறுத்து விட்டாராகில் "ஸுதா விஜயம்" என்று இவர் தாராளமாக எழுதிக்கொள்ளலாமென்று கைகூப்பி நிற்பேன்.

இதற்குமேல் இவர் என்ன ஸாதிக்க எழுவரென்றுல், "ததுபாய ப்ரார்த்தநா என்று இங்கேயிருப்பதால் உபாயபூத வஸ்துவாக ஒன்றை இசைந்தாக வேண்டுமல்லவா? அதில் எனக்கு வெற்றிதானே" என்பர். முன்னர் தாம் மருண்டு எழுதியதற்கு அநுதாபத்தை வெளியிட்டுவிட்டுப் பிறகு இந்த ப்ரஸங்கத்திலிறங்கட்டும்; "மோக்ஷோபாய: ப்ரபத்திஸ் ஸ்யாத்" என்கிற திருக்கச்சிநம்பி திருவாக்கில் கலங்கின வர்களேத் தெளிவுபெறுத்தியே யிருக்கிறோம்.

## இவர் என் வினாக்களுக்கு விடைதர விரும்பினால்

ஸ்ரீ மதுராந்தகம் ஸ்வாமி விடையிறுக்க வேண்டிய எனது வினாக்கள் ஒன்றிரண்டல்ல; பலபலவுள்ளன. அவற்றுக்கெல்லாம் இவர் விடையிறுத்துவிட்டால் பிறகு தம்முடைய ஸுதா விஜயம் பெற்று விட்டதாக ஜயபேரி யடிக்கலாம். வெற்றிக் கொடி நாட்டலாம். நமது வினாக்களுக்கு இவர் இதுவரை விடையிறுக்க நினைத்திலர். ஒருகால் நினைத்தாராகில் எவ்விதமாக இறுப்பர் தெரியுமோ? கேண்மின்.

ஒரு பண்டிதர் மஹா கவியென்று பேரிட்டுக்கொண்டு சுலோகங்களியற்றுவர். ஸ்ரக்தராவ்ருத்தத்தில் ஆரம்பித்து சார்தூல விக்ரீடிதத்தில் தலைக்கட்டுவர். இவ்வண்ணமாகவே ஒரு காவியமெழுதிப் பண்டிதர்களைத் திரட்டி அரங்கேற்றினார். ஒன்றிரண்டு சுலோகங்களைக் கேட்டவுடனே வ்ருத்தபங்கம் வ்ருத்தபங்கம் என்று காதை முடிக் கொண்டார்கள் வித்வான்கள். அப்போது இந்த கவி கூறுகிறார்—"ஆளவந்தார் மஹா வித்வான், மஹா கவி. அவரே வ்ருத்தபங்க மயமாக சுலோகங்களை இயற்றி விட்டு முடிவில் "ப்ரஸீத மத்வ்ருத்த மசிந்தயித்வா" என்றார். (மத்தோஷ மசிந்தயித்வா) என்றோ, (மத்க்ருத்ய மசிந்தயித்வா) என்றோ ஸாதியாமல் (மத்வ்ருத்த மசிந்தயித்வா) என்று ஸாதித்ததன் உட்கருத்தைப் பெரியவாச்சான்பிள்ளையு மறிந்திலர், தேசிகனு மறிந்திலர். ஆளவந்தார் அநுஷ்டுப்பில் தொடங்கிப் பல வ்ருத்தங்களில் முடித்தாராதலால் அந்த வ்ருத்தக் கோளாறுகளைப்பற்றி யாரும் சிந்திக்கலாகாது என்றார்; அவரே அப்படிச் சொல்லியிருக்க நான் எவ்வளவிலேன்? என்று கூறி முடித்தார். கேட்ட வித்வான்கள் ஸரிஸரி யென்று சொல்லி வாய்மூடி நின்றார்கள். இதே போன்ற ஸமாதானங்களையே நம் மதுராந்தகம் ஸ்வாமி ஸாதித்தாகும். அவற்றுக்கு அபிநந்தன பத்ரிகை கொடுக்க தாதாசார் போல்வார் பலர் காத்திருக்கிறார்கள். வருக வருக வருக! பொலிக பொலிக பொலிக!

## ஸாரத்திரட்டின் உபஸம்ஹாரம்

நம் மதுராந்தகம் ஸ்வாமி பக்கலில் தத்வஜிஜ்ஞாஸுக்கள் சிலர் வந்து தேசிக ஸம்ப்ரதாயக் கொள்கைகளையும் ஸ்ரீ லோகாசார்ய ஸம்ப்ரதாயக் கொள்கைகளையும் ஸாதித்தருள வேணுமென்று கேட்டால், பகவத்க்ருபை ஸஹேதுக மென்பது தேசிக ஸித்தாந்தம், அது நிர்ஹேதுகமென்பது லோகாசார்ய ஸித்தாந்தம். ஸித்தோபாயந்தான் கார்யகர மென்பர் அவர்கள், ஸாத்யோபாயமே கார்யகர மென்போம் நாம். பிராட்டிக்குப் புருஷகாரத்வ மாத்ரமேயுள்ள தென்பர்கள் அவர்கள்; மோக்ஷப்ரதத்வமு முண்டென்போம் நாம். ப்ரபத்தி உபாயமன்று என்பர் அவர்கள். அது உபாயமே யென்போம் நாம். பரகத ஸ்வீகாரமென்று ஒன்று சொல்லுவர் அவர்கள். ஸ்வகத ஸ்வீகாரத்திற்கு மேல் ஒன்று கிடையாது, பரகத ஸ்வீகாரமென்பது அர்த்தமில்லாத வார்த்தை என்போம் நாம் என்று இப்படி அடுக்கிக்கொண்டே போவர். கேட்டவர் யதாஜாதராயிருந்தால் அடியேன்! அடியேன்! என்று தலையாட்டிப் போவர். அவர் தேசிக க்ரந்தங்களையும், என்னுடைய நூல்களையும் பார்த்தவராயிருந்தால் ஒரு நொடியில் இவரை வாய்மாளப் பண்ணுவர்.

அவசியமென்று தோன்றினால் இனி நூலினுள்ளே இறங்கலாம்.

P. B. Annangaracharya.

ஶ்ரீ :

பேரருளாளன் பெருந்தேவித்தாயார் திருவடிகளேசரணம்



ஆழ்வாரெம்பெருமானுர் ஜீயர் திருவடிகளே சரணம்

ஶ்ரீ காஞ்சீ பிரதிவாதிபயங்கரம்

**அண்ணங்கராசாரியர்**

திருவரங்கம் பெரிய கோயிலில் எழுதிய

# பரவாதிசிரோபூஷா

(சுலோகங்கள்)

நிகமாந்த குரூத்தமஸூக்தீ ததிஸ். ஸததம் ஹ்ருதயே வஹதாம் மஹ தாம்.
சரணௌ சரணம் ஹ்ரூதயே கலயந் ப்ரவாதிபயங்கர ஸூரிரிஹ.

மதுராந்தக வீரரகூத்பஹ வாங்நிவஹேஷு த்ருசம் நிதத் ஸபதி,
பரமார்த்த விபோதக்ருதே விதுஷாம் லிகதி ப்ரதிவாத்யவதம்ஸ க்ருதிம்.

மதுராந்தக ஸூரிரஸௌ ஸுசி ரரந்மயி நிஷ்கபடப்ரணயப்ரசுர:,
அநவத்ய ஸுஹ்ருத்ய ஸு த்த்ய வசாம்ஸ்யவலோக்ய மம ப்ரதிவக்து மநாக்.

(இந்த மூன்று சுலோகங்களின் கருத்து.) நிகமாந்த மஹா குருவின் திவ்ய ஸூக்தி மாலைகளை எப்போதும் சிந்திக்கும் மஹான்களின் திருவடிகளைத் தஞ்சமாகப் பற்றின அடியேன் (ப்ர-அ.) ஶ்ரீ மதுராந்தகம் வீரராகவாசார்ய ஸ்வாமியின் (இப்போதைய) ஒரு சுவடியைக் கண்டு உடனே வித்வான்களுக்கு உண்மைப் பொருளை உணர்த்த வேண்டி இந்த சிரோபூஷண நூலை யெழுதுகின்றேன். ஶ்ரீ மதுராந்தக ஸ்வாமி இளமை தொடங்கியே அடியேன் பால் கள்ளங் கவடற்ற அன்பு நிறைந்தவர். அவர் இப்போது அடியேனுடைய இந்நூலைக் கடாக்ஷித்தருளிச் சிறிதளவாவது விடை கூறியருள வேணு மென்கை.)

அடியேன் இந்த ஸம்வத்ஸரம் கோயில் திருவத்யயன மஹோத்ஸவம் ஸேவிக்க வேணுமென்று சென்ற மார்கழித் திங்கள் முதலாகவே பாரிப்புக் கொண்டிருந்து திருநெடுந்தாண்டகத்திருநாளன்றே இவ்விடம் விடை கொண்டேன். புத்தூர் வக்கீல் ஸ்வாமி என்று ப்ரஸித்தரான ஸ்ரீமதுபயவே S.கிருஷ்ணஸ்வாமி அய்யங்கார்ஸ்வாமி (M.A.B.L) மாதந்தோறும் நடத்திவரும் ஸ்ரீ வைஷ்ணவ ஸுதர்சன பத்ரிகைக்கு இருபத்தைந்தாண்டு பூர்த்தி விழாக்கொண்டாட்டமான ரஜதமஹோத்ஸவத்தில் அன்வயிக்கவேணும் என்ற பாரிப்புடனும் விடை கொண்டேன். அந்த மஹோத்ஸவம் 6-12-72 முதலாக நடைபெற்று வருகின்றது. 13-12-72ல் முடிவடைகின்றது. இந்த விஜ்ஞாபனம் 11-12 72ல் கோயிலில் இருந்து கொண்டு எழுதுகின்றேன். மேலே குறித்த வெள்ளி விழாவில் முக்கிய கார்யமாக உத்தேசிக்கப்பட்டிருந்த ஸ்ரீ ஸூக்தி மாலா ஆவிஷ்கரணம் என்கிற சடங்கு 10-12-72 ஞாயிற்றுக்கிழமையன்று மிகச் சிறந்த முறையில் நடைபெற்று இரவு 10- மணிக்கு மேல் அந்த ஸ்ரீ ஸூக்திமாலைகளை கோயில் கஜேந்தராழ்வான் முடியிலேற்றி விலக்ஷணஸ்வாமிகள் பலர் நிகழ்த்திய ஸ்தோத்ர பாட கோஷ்டியுடன் அடியேன் வந்து கொண்டிருக்கையில் ஒரு ஸ்வாமி வந்து அடியேனிடம் ஒரு சுவடி கொடுத்தார். அதன் பெயர் சுதாநிஷ்கர்ஷதூஷணீ விஜயம் என்பதாம். இதனை மறுநாள் வாசித்துப் பார்த்தேன். அதின் உபக்ரம வாக்கியங்கள் என்னவென்றால் “பெரிய பிராட்டியாருடைய விபுத்வோபாயத்வங்களை ஸித்தாந்தம் செய்து விசிஷ்டாத்வைத ஸித்தாந்தத்தை விசிஷ்டத்வைதமாக்கிக் குட்டிச்சுவர் ஆக்கிவிட்டார்கள். தேசிக ஸம்ப்ரதாயஸ்தர்கள் என்பதாக ப்லவங்க ஸ்ரீ ஆடி மாஸத்து ஸுதர்சனப் பத்ரிகையில் பிரசுரித்தார் பத்ராதிபர்’ என்று. இந்த வாக்கியத்திலுள்ள குட்டிச்சுவர் ஆக்கினர்கள் என்ற சொல் வடிவம் ஸுதர்சன பத்திரிகையில் உள்ளதா என்பதை முந்துற முன்னம் பார்க்க வேண்டும் இந்தச் சொல் வடிவத்தை காஞ்சீ ப்ரதிவாதி பயங்கரர் எழுதினர் என்றால் உலகம் நம்பும். (வைகுண்டவாஸியான) ஸ்ரீமத் பரம ஹம்ஸ- அயோத்யா ராமாநுஜ ஜீயர் ஸ்வாமி எழுதி வைத்திருக்கிறார் என்றாலும் உலகம் நம்பும். ப்லவங்க வருஷத்து ஆடி மாதத்து ஸுதர்சனப் பத்ரிகையில் என்று ஆகரமும் காட்டுகிறார் இவர். இந்த வாக்யாநுவாதம் ஆர்ஜவம் பொருந்தியதா என்பதை ப்ராமாணிக பண்டிதர்கள் பார்க்க வேணும். வாத விவாதங்களில் அன்யூநஅநதிரிக்தமாக அநுவாதங்கள் செய்வேணுமென்பதை ஸ்வாமி அறியாதவரல்லர். இங்கிவர் செய்திருக்கும் அநுவாதம் மனப்பூர்வமான விப்ரலம்பமேயாகும். இச்சுவடி முழுதும் இத்தகைத்தே என்பதற்கு இஃதொன்று காட்டினது போதும். தாம் குட்டிச்சுவராக்கினது தம்முள்ளத்தில் உறைந்திருப்பதால் அதுவே வெளி வந்தது போலும். இது நிற்க.

இப்போது அடியேனுக்கு கிடைத்த சிறுசுவடியின் பெயர் “ஸுதா நிஷ்கர்ஷ தூஷணீ விஜயம்” என்பது. ஸுதா என்கிற நூலினுடையவும் நிஷ்கர்ஷ மென்கிற நூலினுடையவும் தூஷணீயென்கிற நூலினுடையவும் வெற்றி என்பதாம். வடமொழியில் தூஷணீ என்றொரு பதம் கிடையவே கிடையாது. லக்ஷணம் என்கிற வடசொல் ஸங்க்யாபூர்வகமாகி பஞ்சலக்ஷணீ சதுர்தசலக்ஷணீ என்றுவது போல தூஷணம் என்கிற வடசொல்லும் ஸங்கியாபூர்வகமானால் [அதாவது தச, சத இத்யாதிலக்கங்களை முற்கொண்டால்] தச தூஷணீ, சத தூஷணீ என்றாகும். த்ரிலோகீ

ஸப்தலோகீ பஞ்சவட இத்யாதிகள் போலே. தனியாக தூஷணீ என்று வழங்குவது தவறு. "நாமைகதேசசர்ரஹணமாகையாலே கூடும், இது தவறன்று" என்பரிவர். நாமைகதேசக்ரஹணம் தாராளமாகவுண்டு. அதை அஸங்கதமாகச் செய்யலாகாது. நாதமுனிகளின் திருநாமம் ஸ்ரீரங்கநாத ரென்றும் அதில் ஏகதேச க்ரஹணமாக நாதாய என்ற தென்று தேசிகன் ஸ்தோத்ரபாஷ்யத்தில் ஸாதிக்கிறுர். அது ஸம்பந்தமானது, அஸங்கதமன்று. சிசுபாலவதம் என்கிற காவியநாமத்தை ஏகதேச கிரஹணம் பண்ண வேண்டுமானுல் சிசுபால னென்றே வதமென்றே ஏகதேச கிரஹணம் பண்ணலாகாது. அது பூர்த்தியாகவே வழங்க வேணும், அதே போல சத தூஷணீ என்பதில் தூஷணீ என்று ஏகதேச கிரஹணம் பண்ணுவது அஸங்கதம் இதற்கு ஸமாதானம் சொல்ல வழி தேடி அலைய வேண்டா. இப்போதைக்கு இது ஒரு பெரிய விஷயமன்று. முக்கியமான விஷயத்தைக் கேண்மின்.

இச்சுவடியின் முதல்பதம் ஸுதா என்பது. தாம் ஸம்பிரதாய ஸுதா என்ற கவடியை எழுதி இருந்ததாகவும், அது விஜயம் பெற்று விட்டதாகவும் காட்டுகிறுர் இவர்ரிப்போது. இவர் ஸுதா என்று வெளியிட்டது உண்மை அது அப்போதே மடிந்து விட்டது என்று உலகமறியும் அடியேன் நடத்தி வரும் ஸ்ரீராமநுஜன் என்கிற மாத பத்திரிக்கையின் (290) ஆம் சஞ்சிகை நேற்றே வெளி வந்தது. அதனுடைய 229, 230, 235, ஆகிய 3 லக்கங்களில் அந்த ஸுதாவுக்கு பரிபூர்ண கண்டனமான 'ஸம்பிரதாய சாம்ராஜ்யம்' என்கிற அடியேனுடைய நூல் வெளி வந்து உலகம் பரவியுள்ளது. 3 ஆஹ்னிகம் உள்ளது. 56 பக்கம் கொண்டது அதை இவர் நித்யபாரயணம் செய்து கொண்டு இருக்கிறுரே அல்லது அதற்கு மறுப்பாக ஒருவரியும் எழுதியிருப்பவருமல்ல எழுத நினைத்தவருமல்ல. அது இப்போது திடீரென்று வெற்றி பெற்று விட்டதாக இந்திர ஜாலம் காட்டுகிறுர். மேலே குறித்த ஸ்ரீராமாநுஜ சஞ்சிகைகள் மூன்றும் இந்த ஸ்ரீரங்கத்தில் 30 ஸ்வாமிகள் திருமாளிகைகளில் விளங்குகின்றன. அவற்றிலிருந்து முக்யமான பகுதிகளை கீழே குறிப்பிடுகிறேன்

## முதலில் 229 ஆம் ஸஞ்சிகையிலுள்ள விஷயத்தின் ஸாரம்

1. ஸ்ரீரங்கம் வேதாந்ததேசிக ஸித்தாந்தாபிவர்த்திநீ ஸபையின் வெளியீடான ஸம்ப்ரதாயஸுதா என்னும் சிறுநூல் இன்று வரப்பெற்றேம். இது ஸ்ரீ உ. வே. மதுராந்தகம் வீரராகவாசார்ய ஸ்வாமியாலியற்றப்பெற்று ஸ்ரீ உ. வே. திருவரங்கம் திருமலைதாதாசாரியார் ஸ்வாமியின் ப்ரஸ்தாவனையோடு வெளிவந்துள்ளது. முகப்பில் ஸ்ரீரங்கம் ஸபையின் பெயரால் ஒரு முன்னுரையும் வெளிவந்துள்ளது. அந்த முன்னுரையிலும் அடுத்த ப்ரஸ்தாவனையிலும் நூலாசிரியரை வெகு உயரத்தில் தூக்கிவைத்திருப்பதுபற்றி நமக்கு ஆக்ஷேபமோ அஸூயையோ ஈஷத்துமில்லை. குவலயானந்தத்தில் நிதர்சநாலங்காரத்தில் தீக்ஷிதர் உதாஹரித்திருக்கும் "உந்நதம் பதமவாப்ய" என்னும் சுலோகம் ஸஹ்ருதயர்களுக்கு நினைவுக்கு வாராமலிருக்க வேணுமே. அது நிற்க. இச் சிறுநூல் ப்ரதிபக்ஷியானவொருவர்க்குக் கண்டனமாகத் தோன்றியதென்று ஸ்பஷ்டமாய்க் காண்கிறது எங்ஙனேயென்னில் "என்று தானே இவர் எழுதவேண்டும்" "என்பதுவும் இவர்படி" ...இத்யாதிகளை இடையிடையில் எழுதியுள்ளார். இவற்றுல் ஒருவ்யக்தியை யுத்தேசித்து மறுப்பாக இவர் இதனை யெழுதியுள்ளாரென்பது வயக்தமாகிறது. அந்தவ்யக்தி யார்?

2. உலகமறியத் தெரிவிக்கிறேன். மூன்று நான்கு மாதங்களாகவே நம்முடைய ஸ்ரீ ராமாநுஜனிலும் வைதிகமநோஹராவிலும் இந்த ஸ்வாமியின் திருநாமத்தை நாம் ஸ்பஷ்டமாக வேளியிட்டே விஷயங்களை வரைந்துள்ளோம், ஒரு அய்யபதேச்யன் ஸ்ரீரங்கநாத பாதுகாபத்ரிகையில் பூருவாசாரியர்களைக் கலிபுருஷாவதாரமென்றெழுதி வெளியிட்டதிலிருந்து விளைந்த விவாதத்தில் அநவஸரமாக இந்த மதுராந்தகஸ்வாமி மாட்டிகொண்டார். நமக்கு நேர்முகமாகவும் இவர் ஐந்தாறு பத்ரிகைகளை (6 பக்கம், 8 பக்கம் இப்படியாக) எழுதியிருந்தார். அவற்றுக்கெல்லாம் நம்முடைய வடமொழி தென்மொழி மாதாந்த பத்ரிகைகளில் மறுவாய்திறக்க வழியில்லாதபடி ஸமாதானங்கள் வெளிவந்துள்ளன. அதன்மேல் இவர் ஆர்ஜவத்துடன் செய்யவேண்டியதென்னவென்றால் "அண்ணங்கராசார்யருடைய ஆக்ஷேபங்களுக்கு இதோ ஸமாதானங்கள் தெரிவிக்கிறேன்" என்று தொடங்கிச் செவ்விய நெறியில் எழுதியிருக்க வேண்டும். மேலேகுறித்த இரு பத்ரிகைகளிலும் நாம் வரிசையாக லக்கமிட்டு விவக்ஷிதங்களை விளக்கியிருக்கிறோம். இவரும் அந்த லக்கங்களினடைவிலேயே தம்முடைய ஸமாதானங்களைத் தெளிவாக விவரித்திருக்கவேண்டும். அதற்கு ஈஷத்தும் விஷயமில்லாமையினாலே காடுபாய்ந்து *ஆம்ராந் ப்ருஷ்ட: கோவிதாராந் ஆசஷ்டே* என்பதற்கு ஸ்மாரகமாக எதையோ எழுதிப்போருகிறார். எதையும் விடாமல் நாம் க்ரமேண விடையிறுக்கவே போகிறோம். ஆனாலும் இவருடைய அநார்ஜவத்தை முன்னம் விளக்கவேண்டியது அவசியமாகிறது.

3. ஒருவர்க்கும் மறுப்பென்று காட்டாமல் லோகாபிராமபத்ததியில் விவக்ஷிதங்களை விளக்கி எழுதிப் போருவதும் உத்தமர்கட்கு உரியதே. அந்த பத்ததியை இவர் அவலம்பிப்பதானால், "என்றுதானே இவர் எழுதவேண்டும்" "என்பதுவும் இவர்படி" இத்யாதி வார்த்தைகள் புகுந்திருக்கக்கூடாது. மேலும், நமது உக்திகளுக்கு மறுப்பாக எழுதி வெளியிட்டவிவர் முந்துறமுன்னம் நமக்குத் தமது நூலையனுப்பியிருக்க வேண்டும் "நஞ்சுடைமைதானறிந்து நாகங் கரந்துறையும்" என்னும்படி ஒளித்துக்கிடந்தவிதனை நாமாக முயன்று பெற்றிருக்கிறோம் (தேள் பாம்பு முதலியன போலே) வெளியில் தலைகாட்டினவாறே தலைமடிந்தொழியுமென்கிற திடநம்பிக்கையைத் தாம்கொண்டிருந்தார் பாவம்! விதி மாண்டபடியால் வெளிவந்துவிட்டதந்தோ!

4. உலகில் க்ரந்தமெழுதக் கைவைப்பவர்களுக்கு அபாதிதமான சாஸ்த்ரவ்யுத்பத்தியும் ஸாஹித்யவ்யுத்பத்தியுமிருக்கவேண்டும். *சதிரமென்று தம்மைத் தாமே சம்மதித்து* என்று திருவாய்மொழியிலருளிச்செய்கிறபடி தம்மைத்தாமே க்ரந்த சதுஷ்டயாதிகாரியாக நினைத்துக்கொள்வதிலும் வெளியிட்டுக்கொள்வதிலும் சிரமமில்லை. இவருடைய வ்யுத்பத்தி எத்தகைத் தென்பதை முன்னம் ஒரு சிறு விஷயத்தில் விளக்கிவிடுகிறேன். 'லக்ஷ்மி உபாயத்வஸம்ரக்ஷணம்' என்கிற ஆறுமதிகாரத்தில் ச்ருதப்ரகாசிகாசார்யருடைய சரணாகதிகத்யபாஷ்யத்திலிருந்து ஒரு பங்க்தியை யுதாஹரித்து அர்த்த மெழுதுகிற அழகைக் காண்மின்;

"ச்ரியம் ப்ரபத்ய தத்ஸந்நிதௌ மூலமந்த்ரேண ஸ்வரூபாநுரூப
புருஷார்த்த ப்ரார்த்தநம் ததுபாயப்ரார்த்தநாபர்யந்தம் க்ருத்வா"

என்பது இவருதாஹரித்த ஸ்ரீஸூக்தி. இதன் பொருளென்னவென்றால், பெரிய பிராட்டியாரைப் பணிந்து அவள் பக்கலிலே பகவத் கைங்கர்யமாகிற ஸ்வரூபாநுரூப புருஷார்த்தத்தையும், அதற்கு உபாயமான தச்சரணாகதி நிஷ்பத்தியையும் ப்ரார்த்தித்து—என்பது தவிர வேறு எந்த பொருளுங் கிடையாது. * பகவந்நாராயண இமேத்யாதியாலே பிராட்டியைப் பணிந்தவுடனே* பாரமார்த்திகேத்யாதிசூர்ணையில் '' நித்ய கைங்கர்ய ப்ராப்த்யபேக்ஷயா * என்றும் பகவச்சரணாரவிந்த சரணாகதி: அஸ்து மே * என்றுமுள்ள ஸ்ரீஸூக்தியினால் ஸ்வரூபாநுரூப புருஷார்த்தமும் அதற்குறுப்பான (சரணாகதியாகிற) உபாயத்தின் நிஷ்பத்தியுந்தானே ப்ரார்த்திக்கப்பட்டிருக்கிறது. ஸம்ஸ்க்ருத ஜ்ஞானமுள்ள யாரும் இதைத்தான் பொருளாகக் கூறுவர். ஸ்ரீரங்கதிலகரான ஸ்ரீமதாண்டவன் ஸந்நிதியிலோ மற்றும் எந்த மஹானுடைய ஸந்நிதியிலோ கேட்டுப்பார்க்கலாம். இது ஸம்ப்ரதாய பேதவிசார விஷயமன்று. எந்த மதஸ்தரும் விமர்சிக்கக்கூடிய பொது விஷயமேயிது. வ்யுத்பத்தி பரீக்ஷணமிது.

5. ப்ரக்ருதஸூதாகாரர் என்ன பொருளுரைக்கிறாரென்று பாருங்கள்: '' பிராட்டியின் பக்கல் புருஷார்த்த ப்ரார்த்தனமும் உபாயத்வ ப்ரார்த்தனமும் செய்து'' என்று (பக்கம் 33ல்) எழுதியுள்ளார். முன் பக்கத்தின் தலைமேல் லக்ஷ்மி உபாயத்வ ஸம்ரக்ஷணம் என்று மகுடமிட்டிருக்கிறார். லக்ஷ்ம்யுபாயத்வத்தை ச்ருதப்ரகாசிகாசார்யர் ஸாதித்துவிட்டதாக மருண்டுவிட்டார். ஐயோ பாவம்! இவரெடுத்த ஸ்ரீஸூக்தியில் ' உபாயப்ரார்த்தநா ' என்றிருக்கிறதேயொழிய 'உபாயத்வ ப்ரார்த்தநா' என்றில்லை. உண்மையில் ஸ்ரீஸூக்தியும் அங்ஙனே கிடையாது. இவரும் அங்ஙனே யுதாஹரிக்கவில்லை. ' உபாய ப்ரார்த்தநா ' என்பதற்கு உபாயபூத வஸ்துவின் ப்ரார்த்தனையென்று அர்த்தமேயல்லது உபாயத்வப்ரார்த்தனையென்று ஒருநாளும் அர்த்தமாகாது. தர்க்கரத்ந— ந்யாயகேசரி பிருதாலங்க்ருதரான இவரும் *ஸந்நிவீராதாதமென்று நாம் பலகால் உதாஹரிக்கும் நையாயிகருக்கு ' கிம் கநிஷ்ட: கிமு ஜ்யேஷ்ட:: என்னத் தகுந்தவரே இதில் ஸந்தேஹகந்தமுமில்லை.

6. மீண்டும் விவரிக்கிறோமிதை. இவ்விஷயத்தை நாம் லகுவாக விட்டிடுவோமல்லோம். விவாதாஸ்பத ஸம்ப்ரதாய விஷயங்களில் சேர்ந்ததன்று இது. இவருடைய வ்யுத்பத்தியின் வைகரியைப் பரீக்ஷிக்கும் நிகஷோபலமிது. ப்ரக்ருத ச்ருதப்ரகாசிகா ஸூக்தியை உதாஹரிக்குமிவர் அதற்கு என்ன அவதாரிகையிட்டிருக்கிறாரென்பதையும் கண்திறந்து காண்மின்; ''ச்ருதப்ரகாசிகாசார்யர் தமது சரணாகதி கத்ய வ்யாக்கியானத்திலே பிராட்டியின் ஸாக்ஷாதுபாயத்வத்தை ஸம்ப்ரதாய ஸித்த மென்றருளிச் செய்திருப்பது உற்றுநோக்கத்தக்கது'' என்றெழுதிவிட்டு உடனே அவருடைய ஸ்ரீஸூக்தியை தேவநாகரியிலும் தமிழிலும் பதிப்பித்துள்ளார். பிராட்டி பக்கலில் உபாயத்வ ப்ரார்த்தனம் செய்கிறாரென்று எழுதுகிறாரே, இது சப்தலப்யமா அன்றோ? என்கிற விசாரம் கிடக்கட்டும்; இதற்கு என்ன கருத்து? என்றாராயலாமே. பிராட்டி பக்கல் உபாயத்வ ப்ரார்த்தனையென்பது மூலத்திலுமில்லை; ஸங்கதமாகக் கூடியது மன்று. ''ஹந்த! கர்த்தபகாநே ஸ்ருகால விஸ்மய:'' என்பதை நினைவூட்டும்வகையில், பண்டிதராஜ. திருமலை தாதாசார்யர் ஸ்வாமி இட்டிருக்கிற ப்ரஸ்தாவனையில் ''இந்த க்ரந்தம் வெகு அழகாக அமைந்திருக்கின்றது; அடி முதல்

நுனி வரையில் ஒரு அக்ஷரங்கூட விடாமல் வாசிக்கும்படி குதூஹலம் உண்டா யிற்று'' என்றுள்ள வாக்கியத்தை இச்சிறு சுவடியின்ஒவ்வொரு பக்கத்திலும் நினைத்து நினைத்து விலவறச் சிரிக்கநேர்ந்தது. ப்ரக்ருத ஸ்தலம் பீஜமர்த்தனமான இடமல்லவா? முன்னுரையில் ''தர்க்க வேதாந்தங்களில் தலஸ்ப்ருக்காயும் க்ஷோத க்ஷமமாயுமுள்ள விசதஜ்ஞானத்தைப் பெற்றிருப்பது மாத்ரமின்றி அதிதுரூஹ மான சாஸ்த்ரார்த்தங்களை யாவரும் அதிஸுலபமாக க்ரஹிக்கும்படி அவலீலையாக விரித்துரைக்கும் ஸாமர்த்தியம் ஸ்ரீ ஸ்வாமியிடத்தில் காணலாம்'' என்றதையும் இங்கே மெய்யாகக் காணலாம் கண்ணுடையார். இங்கேயென்ன? எங்குங்காணலாம்.

7. ப்ரக்ருதஸ்தலத்தில் ''தநுபாயப்ரார்த்தநா'' என்றதில் தச்சப்தார்த்தமாக ச்ருத ப்ரகாசிகாசார்யருக்கு விவக்ஷிதம் எது? என்று கேட்டால் இவருடைய த்ருஷ்டி *மேலைத் தண்மதியுங் கதிரவனும் தாரகையின் புறமுங்கடந்து செல்லுமே. அந்த நிலைமையை * தந்யா: பச்யந்து ரங்கிண:.

குறிப்பு:— மூன்று ஆஹ்நிகமாக அமைந்த இந்த ஸம்ப்ரதாய ஸாம்ராஜ் யத்தில் 2 - 3 ஆஹ்னிகங்கள் ஸ்ரீ ராமாநுஜன் 230-ல் வெளிவந்துள்ளன. அவை முழுதும் முக்க்யமானவை. ஆகிலும் அதிலிருந்து ஆதியிலும் அந்தத்திலும் இரண்டு பகுதிகளை இங்கு அனுவதிக்கிறேன்.

## ஸிம்ஹாவலோகநந்யாயேந சில ஸமுத்போதனங்கள்.

கீழே நாற்பது வாக்யச்ரேணிகளை வாசித்து மகிழ்ந்த வித்வான்களுக்கு மறந் திருக்கக் கூடிய சில முக்கிய விஷயங்களைச் சிறிது ஸமுத்போதனம் செய்துவிட்டு மேல் விஷயங்களை உபஹரிப்போம். மதுராந்தகம் ஸ்வாமி தமது ஸம்ப்ரதாய ஸுதா வென்னும் சுவடியை ப்ரதிபக்ஷி கண்டனமாக எழுதப்புகுந்து ப்ரதிபக்ஷி யான நாம் உலகமறிய வெளியிட்டிருக்கிற பூர்வபக்ஷங்களையோ ஆசங்கைகளையோ சோத்யங்களையோ வினாக்களையோ தொடாமலும் அவற்றுக்கு விடை கூறாமலும் அப்ரஸக்த விஷயங்களை வளர்த்திப் பத்ரபூரணம் செய்திருக்கிறாரென்று நிரூபித் தோம்; ''அரை குறை வ்யுத்பத்தி அநர்த்த ஹேது'' என்பதை மெய்ப்பித்திருக்கிறா ரென்று சரணாகதிகத்யபாஷ்ய ஸூக்திக்கு இவரெழுதியுள்ள விபரீதப் பொருளைக் காட்டி நிரூபித்தோம். தேசிகோக்தி தூஷணத்தில் பழுத்தவரான தாதாசாரியர் இவருடைய சுவடிக்கு ப்ரஸ்தாவனை யெழுதத் தகுதியற்றவரென்று மிக விரிவாக விளக்கினோம். தாதாசார்யருடைய சுவடிக்கு மதிப்புரை கொடுக்கும் மதுராந்தகரும், மதுராந்தகருடைய சுவடிக்கு மதிப்புரை கொடுப்பவரான தாதாசாரியரும் ஆக இவ்விருவரும் பகவத் ராமாநுஜ தர்சனத்தைப் புகழவோ தேசிகதர்சனமென்று வாய் திறக்கவோ அவகாச லேசமும் கிடையாதென்று ஆர அமர அறிவித்தோம். * த்ருடபூர்வச்ருதோ மூர்க்க: * இதிமந்தைரிதம் ப்ரோக் தம் * க்ரந்தஜ்ஞைரபஹாஸ்யம் தத் * இத்யாதி யுபாலம்பங்களை வெளியிடுதற்கு அடியான பிராட்டியின உபாயத்வவிசாரத்தில் இவர்கள் வாய் மூடிநிற்கவேண் டியது தவிர வேறில்லையென்று விவரித்தோம், ஸ்ரீ ஸூக்த பாஷ்யம் நஞ்சீயருளிச் செய்த தன்றென்று நிலைநாட்டினோம். [இதில்] வக்தவ்ய சேஷமுண்டு;

அது மேலே வரும்.] சாரீரகார்த்த நிர்ணயம் இவர்க்கில்லை யென்றதற்கு இவர்களுடைய பரம்பரையிலேயே அது அந்நாள் தொடங்கியேயில்லை யென்று உபபாதித்தோம். கீதாபாஷ்ய ஸ்ரீபாஷ்ய ஸூத்திஸமந்வயம் காணகில்லாதார்க்கு அதனை நன்கு காட்டிக் கலக்கத்தை சமிப்பித்தோம். ஸூதீவிலோசனவிஷயே புராதன கதாப்ரபஞ்சனம் பண்ணினோம். பிரதிபக்ஷி வகுப்பினரில் இரு நூறு வருடங்களுக்கு முன் ஆழ்வாரையோ எம்பெருமானாரையோ தேசிகனையோ ப்ரஸ்தாவித்த ஒரு வ்யக்தியைக் காட்டிவிட்டால் இதுகாறும் நான்கு பாஷைகளிலும் நாமெழுதி வெளியிட்டுள்ள புத்தகங்களையும் கிழித் தெறிந்துவிட்டுத் தலைமறைந்து காலங்கழிப்போ மென்று கோரமான சபதம் செய்திருக்கிறோம். பிரதி பக்ஷிகள் தேசிகனைப் பிடித்துக் கொண்டகாலம் இன்னதென்று விளக்கியிருக்கிறோம். எதிர்த் தலையிலுள்ள வொரு துர்ப்பிக்ஷத்தை விளக்கித் தலைக்கட்டினோம்.

## மூன்றுவது ஆஹ்நிகத்தின் முடிவுரை.

இந்த வ்யாப்தி விஷயத்தில் ப்ரஹ்மவ்யாப்திபரீக்ஷ க்ரியா என்கிற ஸம்ஸ்க்ருத நூலை நாம் வெளியிட்டு முப்பது வருஷமாகிறது. அது யாரை நோக்கி வெளியிடப்பட்டது? அதற்கு யார் பதிலுரைக்க வேண்டியவர்? என்பதை வித்வான்கள் மறந்திருக்கமாட்டார்கள். வைகுண்டவாஸியான ஸ்ரீமத் கோழியாலம் ஸ்வாமியின் பூர்ணத்வ விசாரமென்கிற சிறு சுவடிக்கு மறுப்பாக வெளியிடப்பட்டது. ஆனால் அந்த மஹான் உண்மை தெளிந்து வாளாவிருந்திட்டார், அவருக்குப் பிரதிநிதிகளாகப் பலர் எழுதப் புறப்பட்டார்கள். ஒவ்வொருவருக்கும் நாம் உடனுக்குடனே உத்தர முரைத்தே வந்தோம். அவரவர்கள் மறுபடியும் தாங்கள் வாய்திறவாமல் வேறொருவரை யெழுப்பி ஏவினார்கள். D. T. தாதாசாரியரவர் தாம் கிளம்பி ஸர்வசக்தியென்றொன்று எழுதினர். அதற்கு, அடுத்த வாரத்திலேயே அத்புதசக்தியென்னும் நூலை வெளியிட்டோம். அது 1948-ல். அதைப்பெற்றுக் கொண்டு அவர் ஓய்ந்தார். இவர் இப்போது கிளம்பியுள்ளார். ஏற்கெனவே நமது நூல்களில் வெளிவந்துள்ள ஆக்ஷேப ஸமாதானங்களில் ஒன்றிலும் இவர் கண்செலுத்தினவரல்லர். சர்வசக்தீச் சுவடியை யெழுதிவெளியிட்ட தாதாசாரியரை வாய்மாளப்பண்ணின நமது அத்புத சக்திநூலில் இவருடைய வாக்ப்ரதிக்ஷேபங்களும் பலவுள்ளன. அவற்றுக்கு இப்போதும் இவர் வாய்திறந்திலர். இவருடைய நாடகம் முடிந்தபின் இன்னுஞ் சிலவாண்டுகள் கழித்து வேறொருவர் * சுக்லாம் பரதரம் விஷ்ணுமென்று தொடங்குவர்; தொடங்குவரென்று சோதிடமென்ன? தொடங்கப் போகிறார். நாம் வாழ்நாளுள்ளவளவும் விடையளித்து வருவோம்.... ...

ஸம்ப்ரதாய ஸாம்ராஜ்யத்தில் மூன்றுவது

ஆஹ்னிகம் முற்றிற்று.

இதன் சேஷம் ஸ்ரீராமாநுஜன் 235-ல் 'ஸம்ப்ரதாய ஸாம்ராஜ்யப்ரதிஷ்டா' என்கிற மகுடத்துடன் வெளிவந்து முடிந்திருக்கிறது. அதிலுள்ள ஸாராம்சம் கீழ் வருமாறு:—

—: பண்டிதவுலகம் முழுதும் பார்க்க:—

ஸம்ப்ரதாய ஸாம்ராஜ்யமென்பது ஸ்ரீ உ.வே. மதுராந்தகம் வீரராகவாசார்ய ஸ்வாமி சென்றவாண்டில் வெளியிட்டிருந்த ஸம்ப்ரதாயஸுதாவென்னும் சிறு சுவடிக்கு மறுப்பாக ஸ்ரீராமாநுஜனிலேயே (229·230ல்) வெளிவந்த நூல் என்பதை மறந்திருக்க மாட்டீர்கள். அதில் (பக்கம் 3)ல்) "நம்முடைய கோரமான சபத மொன்று" என்று மகுடமிட்டு எழுதப்பட்டுள்ள (38ஆம்) வாக்யச்ரேணி கீழ்வரு மாறு—

"தேசிகனை ப்ரதிவாதி பயங்கரம் அண்ணன் அப்படி கொண்டாடியிருக்கிறார். சோளஸிம்ஹபுரம் தொட்டயாசாரியர் ஸ்வாமி இப்படி கொண்டாடியிருக்கிறார்... என்று ஒருவர் மாறி ஒருவராக எழுதியும் பேசியும் போருவதனால் என்ன ஸாதித் தீர்களாகிறீர்கள் என்பது தெரியவில்லை. ப்ரதிவாதி பயங்கர வம்சஸ்தர்களும் தொட்டயாசார்ய வம்சஸ்தர்களும் இல்லாமல் போகவில்லையே. அந்நாள் தொடங்கி இந்நாள் வரையில் விலக்ஷண சிஷ்ய ஸம்பத்தோடும், திவ்யதேசமர்யாதைகளுட னும் விளங்கிவரும் பரம்பரையினரானவிவர்கள் அன்றுமின்றும் தென்கலை ஸம்ப்ர தாயஸ்தர்களேயல்லது ஒரு காலத்திலும் ஒரு தேசத்திலும் இதர ஸம்பிரதாயத்தில் காட்டமுடியாது. இவ்வுபய பரம்பரையிலும் வேதாந்தாசார்ய நாமகரணம் விவா தம் முற்றின இக்காலத்திலும் இடையறாது தொடர்ந்து வாரா நின்றது நம்முடைய எத்தனை நூல்களில் இவ்விஷயம் புனருக்தி தோஷத்திற்கு அஞ்சாமல் நிரூபிக்கப்பட் டிருக்கின்றதென்பதை உலகமும் மறவாது. நீங்களும் மறவீர்கள். கி.பி. பதினொன் பதாவது நூற்றாண்டு பிறந்த பிறகுதான் நீங்கள் தேசிகனையறிந்தவர்களேயொழிய, அதற்கு முன்பு தேசிகனென்றோ எம்பெருமானாரென்றோ ப்ரஸ்தாவித்த ஒரு வடகலை வ்யக்திகூட இல்லை இல்லையென்று சபதம் பண்ணியெழுதியிருக்கிறேனே; எழுதின மசி இன்னும் உலரவில்லையே. நீங்கள் அகாண்டேத்வேஷிக்கும் மணவாள மாமுனி களும் தேசிகோக்திகளைத் தம்முடைய வியாக்கியானங்களிலே உதாஹரித்தருளி யிருப்பதையும், மாமுனிகளுக்குப் பிறகும் ஸந்நிஹிதர்களும், வ்யவஹிதர்களுமான ப்ரக்யாத வித்வான்கள் பலர் தென்கலை ஸம்பிரதாயஸ்தர்கள் உதாஹரித்திருப் பதையும் நாமன்றோ பலகால் எடுத்துக் காட்டியிருக்கிறோம். இப்படி உங்கள் வகுப் பில் ஆழ்வாரையோ எம்பெருமானாரையோ தேசிகனையோ ப்ரஸ்தாவித்த புராதந வ்யக்தியைக் காட்டிவிட்டீர்களானால், இதுகாறும் நான்கு பாஷைகளிலும் நானெ ழுதி வெளியிட்டுள்ள புத்தகங்களையெல்லாம் கிழித்தெறிந்துவிட்டு ஆயுச்சேஷமுள்ள வரையில் அஜ்ஞாதவாஸம் செய்வேனென்பது ஸத்யம்," என்பதாக.

இப்படியெழுதியிருப்பதை உலகமெல்லாம் கண்டிருக்கிறது. மதுராந்தகம் ஸ்வாமியோ அதை மனப்பாடம் செய்து வைத்துக்கொண்டிருக்கிறார். இப்படிப் பட்ட இவர் செய்ய வேண்டிய காரியம் என்ன? நானெழுதி வெளியிட்டுள்ள புத்தகங்களையெல்லாம் நானே கிழித்தெறிந்துவிட்டு ஆயுச்சேஷமுள்ள வரையில் அஜ்ஞாதவாஸம் செய்து வரும்படி என்னைச் செய்யவேண்டும். "தேவரீருடைய திருமாளிகையில் வாசற்காப்பானாயிருந்து வாழ்நாளைக் கழிப்பேனென்றும் அவர்க் கே எழுதியிருக்கிறேன். இக்காரியங்களை நான் செய்யும்படியன்றோ இந்த மதுராந் தகம் ஸ்வாமி முயலவேண்டும். அது செய்திலர். வைவஸ்வத மந்வந்தரே கலியுகே அந்திமேபி பாதே செய்யகில்லாரென்பதை மீண்டும் சபதமிட்டுரைக்கின்றேன்.

இது கிடக்கட்டும்; "எதிர்த்தலையிலுள்ளவொரு துர்ப்பிக்ஷத்தைப்புரைத்தல்" என மகுடமிட்டு அந்த ஸாம்ராஜ்ய நூலிலேயே நாற்பதாவது வாக்யச்ரேணியெழுதி யிருக்கிறோம். (அதாவது)

"வாயெடுத்தால் தேசிகன் தேசிகன்—தேசிக தர்சனம் தேசிக ஸம்ப்ரதாயம் என்கிறீர்களேயொழிய, அந்த தேசிகன் நிர்ணயித்த அர்த்தங்கள் இன்னின்னவை யென்று நிராபாதமாக எடுத்துக்காட்ட வல்லீர்களோ! "விசிஷ்டாத்வைத தர்சனம்" என்றும் "தென்னாசார்ய ஸம்ப்ரதாயம்" என்றும் நான் வெளியிட்டிருக்கிற நூல்கள் பலவாண்டுகளாக உலகம் பரவியுள்ளன. இவை ஒரு பாஷையிலல்ல; வடமொழி தென்மொழி வடுகுகளான மூன்று பாஷைகளிலென்பதை உலகமறியும். இவற்றை ஆங்கிலத்திலும் மொழி பெயர்த்து வெளியிட்டுள்ளார்கள்! வெளியிட்டு வருகிறார்கள். இப்படி "தேசிக தர்சனம்" என்று பெயரிட்டு ஒரு சுவடி எழுதி உதவுவீர்களா? அப்படியெழுத உங்களிடம் என்ன சரக்கிருக்கிறது? "யதி ஸ்யாத் உபலப்யேத" என்பது உங்களுக்குத் தெரியாததா? நீங்கள் கொண்டிருக்கிற ஒவ்வோர் அர்த்தமும் ஆழ்வார் ஸ்ரீஸூக்தி விருத்தம், பகவத் பாஷ்யகார ஸூக்தி விருத்தம், கிம் பஹுநா? ஸ்ரீதேசிக ஸூக்தி விருத்தம்-என்று நாம் விபுலமாகச் செய்துள்ள—செய்துவருகின்ற –ப்ராப்த ஸமயேஷு செய்யப் போகின்ற நிரூபணங்கள் "வாஸுதேவக்ருஹம் த்வேகம் ந ப்லாவயதி ஸாகர:" என்னும்படி நிற்பவை யன்றோ? உங்களில் வித்வான்களுக்குக் குறைவா? பிரசுரம் செய்யப் பத்திரிகைகளுக்குக் குறைவா? எதிலும் எக்குறையுமில்லையே. வேதத்தில் "துர்ப்பிக்ஷம் தேவலோகேஷு" [தைத்திரீயாரண்யகே.] என்றாப்போலே உங்கள் திறத்திலே "துர்ப்பிக்ஷம் ஸாத்விகார்த்தேஷு" என்ன வேண்டியன்றோ நின்றது. இப்படி நாம் துணிந்தெழுதுகிறோமென்று *ஸந்தாபயதி ஸ்வம்தேஹ மாபாததலமஸ் தகமாக தபிக்கலாம். சில பாலிசர்களையிட்டு உபாலம்ப வர்ஷங்கள் செய்யலாம். வேறொன்றுமாகாது.? என்பதாக.

இப்படியெழுதியிருப்பதை வாசியாத வித்வான்களுண்டோ? இவர்கள் தேசிக பக்தர்களுக்குச் செய்யவேண்டிய உபகாரங்களில் இதுவன்றோ தலையானது? அவர் செய்யாததும் பின்புள்ளவர்கள் செய்ததுமான சில பிரபந்தங்களை வம்புச் சண்டைக்காக அச்சிடுவதும், சிறு பசங்கள் அவற்றை மனப்பாடம் செய்து கோஷித்தால் பணம் காசு தருகிறோமென்பதுமான சில்லரைச் செயல்களால் என்ன தொண்டு செய்ததாகும்? இந்த எழுநூற்றாண்டு கொண்டாட்டத்திற்கு நீண்டகால நினைவு மலராகப் பல பாஷைகளிலும் வெளியிட வேண்டியதென்னவென்றால் கேண்மின். "தேசிக தர்சன தத்வார்த்தங்கள்" என்று மகுடமிட்டு, ஸ்வாமி தேசிகன் ஸ்தாபித்தருளின ஸம்ப்ரதாய தத்துவங்களை ஸாமான்ய ஜனங்களும் எளிதில் புரிந்துகொள்ளும்படியான நூல்களைப் பரவவிடுவது ஒன்றே உண்மைத் தொண்டர்கள் உலகம் பாராட்டச் செய்யத்தக்கது.

ஸ்ரீ ராமாநுஜன் 141, 142ல் நாம் வெளியிட்டிருப்பது "தேசிக ஹ்ருதயம்" என்கிற நமது நூல். இது ஆசார்ய ஹ்ருதயம்போல் கஹனமான நூலன்று, வியாக்கியான ஸாபேக்ஷமுமன்று. தேசிக திவ்ய ஸூக்திகளை மட்டும் எடுத்துக்காட்டி அவருடைய திருவுள்ளத்தை நிர்த்தாரணம் செய்திருப்பது இந்நூல். இதை உலகமெல்

லாம் கொண்டாடியிருக்கின்றது. அது யுக்தமென்று தோன்றினால் அதை இவர்கள் மறுபதிப்புச் செய்விக்கட்டும். இல்லையேல், அதிலுள்ள நிரூபணங்களை தேசிக திவ்ய ஸூக்திகளைக் கொண்டே மறுத்து, அவற்றுக்கு பகவத் பாஷ்யகாராதி திவ்ய ஸூக்தி ஸம்வாதமும் காட்டி "தேசிகஹ்ருதய யாதாத்ம்யம்" என்னும் பெயரையிட்டோ, தங்களுக்குத் தோன்றின பெயரையிட்டோ பண்டித பாமரபோக்யமானவொரு நூலை வெளியிடட்டும். இதைச் செய்யகில்லாமல் "நெல்வேலியில் ஒரு லக்ஷம்: நெய் வேலியில் இரண்டு லக்ஷம்: கீழ்ப்பாக்கத்தில் மூன்று லக்ஷம்: மேல் பாக்கத்தில் நான்கு லக்ஷம்..." என்றிப்படி வஸூல் கணக்கை வாய்வெருவிக் கொண்டிருப்பத னால் என்ன கோட்டை பிடித்ததாகும்? அப்படியொரு நூல் வெளிவந்தால் "பாறிப்பாறியசுரர்தம் பல்குழாயங்கள் நீறெழ":என்ற ஆழ்வார் பாசுரத்தின்படியே அடுத்த நாளிலேயே (அல்லது) அடுத்த க்ஷணத்திலேயே அது பாறிப்பறந்து போமென்பதைத் தெரிந்து கொண்டுதானேயிருக்கிறீர்கள்.

திருவாய்மொழியில் (10·7·5.) *நண்ணுவசுரர் நலிவெய்த நல்லவமரர் பொலிவெய்த—பண்ணார் பாடலின் கவிகள் யானாய்த் தன்னைத் தான்பாடி* என்பது மிக வற்புதமான பாசுரம். ஆஸுரப்ரக்ருதிகள் அழியும்படியாகவும் தேவப்ரக்ருதிகள் வாழும்படியாகவும் திருவாய்மொழி அவதரித்ததாக ஆழ்வார் தாமே அருளிச் செய்து வைத்தார். திருவாய்மொழியினால் ஆஸுரப்ரக்ருதிகள் எப்படியழியக்கூடும்? என்பதை நிரூபிக்க விரும்பின நம் பிள்ளை ஈடு முப்பத்தாறாயிரப்படியில்—"அவ்யப தேச்யனுக்கு அனந்தரத்திலவன், தமப்பன் செய்ததைக் கேட்டு 'இவன் என் செய் தானான்' என்று கர்ஹித்தான். ஒரு மதிளை வாங்கும் காட்டில் அந்தர்சனம் குலைந் ததோ? திருவாய்மொழியென்றும் ஸ்ரீராமாயணமென்றும் வலியன இரண்டு ப்ரபந் தங்களுண்டாயிருக்க' என்றானாயிற்று. இப்படி உகவாதார் நெஞ்சுளுக்கும்படியான ப்ரபந்தமாய்த்து." என்றருளிச் செய்துள்ளார். இதன் பொருள் விவரித்தாலல்லது விளங்காததலால் விவரிக்கிறோமிங்கு. அவ்யபதேச்யனென்றது க்ரிமிகண்ட சோழனை. மஹாத்ரோஹியான அவன் பெயரை வாயால் சொல்லத் தகாதென்று கொண்டு அவ்யபதேச்யனென்றது. அவனுக்கு அனந்தரத்திலவன்—அவனுடைய மகன். இவன் தகப்பனிறக்கும்போது சிறுவனாயிருந்தபடியால் தந்தையின் சொத் துக்களைப் பிறர் பாதுகாத்திருந்து பருவம் முதிர்ந்தவாறே இவனிடம் ஒப்படைத் தார்கள் அப்போது சொற்பமான செல்வமே இவனுக்குக் கிடைத்தது. "என் தகப்ப னார்: பெரிய லக்ஷாதிகாரியென்று ப்ரக்யாதி பெற்றிருந்தாரே, நீங்கள் இப்போது என்னிடம் சில ஆயிரங்களை ஒப்படைக்கிறீர்களே, அவருடைய பெருஞ் செல்வ மெல்லாம் எங்கே போயிற்று?" என்று மகன் கேட்க, அவர்கள்: சொன்னார்களாம்—'அப்பா! உன் தகப்பனார் பூலோக குபேரனென்னும்படி வாழ்ந்தது வாஸ்தவமே ஏராளமாகச் சிவன் கோவில்களைக் கட்டுவித்தும், பெருமாள் கோயில்களை இயன்ற வளவு இடிக்கச் செய்தும் தனது சொத்துக்களையெல்லாம் பாழ்படுத்தினான் என்பது உனக்குத் தெரியாதா? இப்போது மிச்சப்பட்ட பொருள் இவ்வளவே காண்' என்றார் களாம் மஹாவிவேகியான மகன் அது கேட்டு'என் பிதா சிவன் கோவில்கள் கட்டு வித்ததிருக்கட்டும், பெருமாள் கோவில்களை இடித்துப் போகட்டானென்றீர்களே வைஷ்ணவ தர்சனம் குலைய வேண்டும் என்று தானே இது செய்தது: இதனால் வைஷ்ணவ தர்சனம் குலைந்ததாகுமோ? ஒரு ஸ்ரீராமாயணமும் ஒரு திருவாய்

மொழியுமாகிற இரண்டு கற்பாந்தக் கோட்டைகள் ஸ்ரீவைஷ்ணவ தரிசனத்துக்கு வலிய மதிள்களாக விளங்காநிற்க, கோவில்களை யிடித்ததனுல் என்னுகுமையா' என்றும் ஸ்ரீவைஷ்ணவ தர்சனத்திற்குத் திருவாய்மொழியும் ஸ்ரீராமாயணமும் ஆஸூரப்ரகிருதிகள் மண்ணுண்ணும்படியாக பிரளயத்திலும் அழியாத பெருங் கோட்டைகள் என்று அச்சிறுவனுக்குத் தெரிந்திருந்தது, அது போல ஸ்ரீவசனபூஷணமும் ஆசார்ய ஹ்ருதயமுமாகிற இரண்டு பிரபந்தங்கள் வலிய கோட்டைகளாய் விளங்கப்பெற்ற பகவத் ராமானுஜ தர்சனத்திற்குப் போட்டியாக ஒரு அவ்யப தேச்ய தர்சனங்கிளம்பி என்ன ஆரவாரம் செய்தாலும் என்ன கூத்துக்களடித்தாலும் எத்தனை லக்ஷங்கள் திரட்டினுலும் ஸர்வம் ஹூதம் பஸ்மநி' என்றுமென்று தெரிந்து கொள்ளவில்லையே.

இனி உபக்ராந்த விஷயத்திற் செல்வோம். ''ஸம்ப்ரதாய ஸாம்ராஜ்ய ஸமாபனம்'' நாம் வெளியிட்டு நாலாறுமாதமாயிற்று. இதுகாறும் வாளாவிருந்த ஸ்ரீமதுராந்தகம் ஸ்வாமி திடீரென்று ஒருநாள் (20—6—68ல்) ஏதோ நினைத்துக்கொண்டு சில வெள்ளைக் காகிதங்களைக் கறுப்பாக்கியனுப்பினர், அதிகரணஸாராவளியில் *பாஷ்யாதிக்ரந்தலேசோபி அவஹிதமநஸாம் ஐதமர்த்த்யம் பஜேத* என்றதைப் பற்றி நாமெழுதியிருந்தவற்றுக்கு அநந்விதமாகச் சில வார்த்தைகளையெழுதிவிட்டு ''தேசிக திவ்ய ஸூக்தியில் ஸ்ரீபாஷ்ய விரோதமிருப்பதை எடுத்துக் காட்டுகிறவர் கடல் சூழ்ந்த இம்மண்ணுலகில் தேவரீர் ஒருவர்தானே'' என்று முடித்திருந்தார். உடனே அதற்கு விடையிறுத்தேன்; ''ப்ராமாணிக வ்யவஹாரம் நடத்தவேண்டி அடியேன் தேவரீர் எழுதினதை அப்படியே இசைகிறேன். இதேபோல தேவரீரும் பிராமாணிகமான வழியில் விடையிறுக்க வேணும்'' என்று மூன்று விஷயங்கள் விஜ்ஞாபித்தேன்; (அவை யாவன)

1. ''ஏதத்ரந்த சகல அஸ்வாரஸ்யம் க்ராஹ்யம்'' என்றெழுதி பகவத் பாஷ்யகார ஸ்ரீ ஸூக்தியில் அஸ்வாரஸ்யமேறிட்டவர் 'ஸ்ரீவைஷ்ணவாசார்யர்களில் ஸ்ரீநிகமாந்த மஹாகுருவொருவர் தவிர வேறொருவரில்லையே.

2. தத்வடீகா ஸ்ரீஸூக்தி யொன்றை யெடுத்துக்காட்டி ''அத்ராஸ்தி பஹு அஸாமஞ்ஜஸ்யம்'' என்றெழுதி தேசிக திவ்ய ஸூக்தியை அஸமஞ்ஜஸமென்று தூஷித்தவர் தேசிக பக்தம்மந்யர்களில் ஸ்ரீ D.T. தாதாசாரியாரொருவர் தவிர வேறொருவரில்லையே.

3. ''பகவத்ராமாநுஜரும் கூரத்தாழ்வானும் சேர்ந்து கோவில் சாவிகளைத் தந்திரமாகப் பறித்துக் கோவில் துறையார்களை நிர்ப்பந்தப்படுத்திப் புண்ட்ர விபர்யயம் செய்வித்தார்கள்'' என்றெழுதியச்சிட்டிருப்பவர்கள் (மேலே குறித்த) D.T. தாதாசாரியாரும் தேவரீரும் தவிர வேறொருவர் இல்லையே.

இங்ஙனே மூன்று விஷயங்களை நாம் எழுதி ''இவற்றுக்கு ப்ராமாணிகமாக விடையெழுதி யனுப்பவேணும்'' என்று விநயத்துடன் பிரார்த்தித்திருந்தேன். மத்யஸ்த மஹநீயர்களே! இங்கு ப்ராமாணிகத்வபரிரக்ஷணை நாம் இசைந்ததுபோல இவரும் மேலே நிரூபித்த மூன்று விஷயங்களையும் இசைய வேண்டியது தவிர வேறுண்டோ? இப்படி நாம் கேட்கக் கூடியவை பலபலவிருந்தாலும் இவருடைய ப்ராமாணிகத்வப்

பரிசைத் தெரிந்துகொள்வோம், உலகமும் தெரிந்துகொள்ளட்டும்—என்று மூன்றே விஷயங்களை வரைந்தோம். இதற்கு இவர் என்ன பதிலெழுதினாரென்பதையும், அதற்கு நாம் என்ன பதில் எழுதினோமென்பதையும் அந்த வித்வன் மணி ஸ்வாமியையே கேட்டுத் தெரிந்துக்கொள்வது. அந்த ஸ்வாமிக்கு ஆப்தர்களான பெரியார் பலருளரே. அவர்கள் அவரையே கேட்டுணர்வது நன்று.

நீதிநன்நெறிதவறி யெழுதிக்கொண்டிருந்தவிவர்க்கு நேற்று நாம் முடிவாகத் தெரிவித்தது கேளீர்—"வித்வத்வரேண்ய வீரராகவாசார்ய ஸ்வாமிந்! நாம் காலையிலெழுதி மாலையிலச்சிட்டு வெளியிட்டு லோகோபகாரம் செய்து வருகிறோமென்பதைப் பலவாண்டுகளாக தேவரீர் தெரிந்து கொண்டிருக்கிறது வெட்டியாக எழுதி அவகாசத்தை வீண்படுத்த விருப்பமில்லையடியேனுக்கு. பாதுகாப்ரியாதி பத்ரிகைகளில் தேவரீருடைய கட்டுரைகள் வெளிவந்தால் பிறகு அடியேனழுதுமவை லோகோபகாரத்தில் பர்யவஸிக்கும்." என்று தெரிவித்து நின்றேன். ... ...

ஸ்ரீ ரங்கவாஸிகளான மஹநீயர்களே! தென்னாட்டுத் திலகமான வித்வன் மணிகளே! மதுராந்தகம் ஸ்வாமியின் ஸீதாசுவடி பட்டபாடுகள் இவை. திடீரென்று அந்தச் சுவடி வெற்றிபெற்று விட்டதென்றால் மாயமாய மாயை கொல் மாயமென்ன மாயமே! என்ன வேண்டுமத்துனே. ... ... ....

ஸ்ரீ மதுராந்தகம் ஸ்வாமியை நோக்கி அடியேனெழுதிய
பழைய கட்டுரைகள் கிடக்கட்டும். இப்போதைய
விஜ்ஞாபனங்களைத் திருவுள்ளம் பற்றவேணும்.

ஸஹ்ருதய ஸுஹ்ருந்மணே ஸ்வாமிந்! தேவரீரையும் தேவரீர் போல்வாரையும் [அதாவது வடகலையார்கள் எனப்படுபவர்களை] நிர்தேசிக்கவிரும்புமவர்கள், தேசிக ஸம்ப்ரதாயஸ்தர்களென்றும் தேசிக பக்தர்களென்றும் நிர்தேசிப்பதுண்டு; அடியேன் அப்படி யொருகாலும் நிர்தேசிப்பவனல்லேன். தேசிக பக்தம்மந்யர்கள், தேசிக ஸம்ப்ரதாயஸ்தம்மந்யர்கள்—என்றே நிர்தேசிப்பவனடியேன். இதுதான் பொருத்தமானது. உண்மையில் பண்டிதனல்லாத வொருவன் தன்னைப்பண்டிதனென்றும் பண்டிதராஜனென்றும் வெளியிட்டுக்கொண்டால் அந்த வ்யக்தியை விவேகிகள் நிர்தேசிக்கவேண்டும் போது "கோபி பண்டிதம்மந்ய:, கச்சந பண்டித ராஜம்மந்ய: என்று தங்கையாலெழுதுவர்களேயன்றி வேறுவிதமாக எழுதமாட்டார்களன்றோ. அதே போலவே அடியேன் தேவரீர் வகுப்பினரை "தேசிகபக்தம் மந்யா: என்றும் தேசிக ஸம்ப்ரதாயஸ்தம்மந்யா: என்றுமே உண்மையுமணர்ந்த நாள் முதலாக வ்யபதேசித்து வருகிறேன். ஸம்க்ஷேபருசியாலே நவீநா: என்பது பெரும்பான்மை.

இதன் மேல் தேவரீர் கேட்கக் கூடிய தென்னவென்றால், "நாங்கள் உண்மையில் தேசிக பக்தர்களல்லோமோ? நாங்கள் கொண்டிருக்கிற ஸம்ப்ரதாயம் தேசிக ஸம்ப்ரதாயமன்றோ?" என்று. ஸ்வாமிந்! எதையும் அடியேன் ப்ரதிஜ்ஞாமாத்ரத்தோடு விடுபவனல்லேனென்பதும் ஆர அமர உபபாதித்தே விடுபவனென்பதும் தேவரீர் அறியாததன்று. இப்போது அனைவருமறிய உபபாதிக்கிறேன். இரண்டு வகைகளாலே உபபாதிக்கிறேன். (1) தேசிகனுடைய அர்ச்சாவதார திவ்யமங்கள விக்ரஹங்களுக்கு நெடுநாளாகவே பாஹ்யர்கள்— என்பதுமுதல் வகை. (2) தேசிகனுடைய திவ்யஸூக்திகளுக்குப் பெரும்பாலும் பாஹ்யர்களென்பது இரண்டாம் வகை. இவ்விரண்டு வகைகளில் எந்த வகையை முக்கியமென்னலாமென்று பார்ப்பேன். இரண்டும் ஸமப்ரதானமேயென்பேன். முதல் வகையைப் பற்றிச் சிறிது கேளீர்.

திருவத்யயனோத்ஸவ மென்பது திவ்ய தேசங்கள் தோறும் நடைபெற்றாலும் திருவரங்கம் பெரிய கோவிலில் நடைபெறுவதே லோகோத்தரமென்பது பற்றிச் சொல்லவேணுமோ? ஆழ்வார்களும் ஆசார்யர்களும் ஆச்சரியமாக எழுந்தருளி அற்புதமாக மஹோத்ஸவம் நடைபெறுகிறது.

"லுலுபே ஸ்வயமேவ சேதஸா வரயோகிப்ரவரஸ்ய சிஷ்யதாம்" என்று எறும்பியப்பா பணித்தபடி அரங்கேசன் மணவாளமாமுனிகளுக்கு அந்தேவாஸியானபடியால் மற்றுள்ள ஆழ்வாராசாரியர்களோடொப்ப மாமுனிகளுக்கும் தன்னுடைய திருவடி நிலையைத் தரிக்க வைப்பதில் அநௌசித்யங்கண்டு அவரை மட்டும் அவர் ஸன்னதியிலேயேயிருத்தித் தன்னெதிரே நடக்கும் அருளிச் செயல் ஸேவை அங்கும் நடைபெறும்படி நியமித்தருளி, சிஷ்யக்ருத்யமாக [மாசிமாத க்ருஷ்ண த்வாதசியன்று] மாமுனிகளுக்கு திருவத்யயனோத்ஸவத்தை கோயில் பரிஜனபரிபர்ஹங்களையெல்லாமனுப்பிச் சிறப்பாக நடத்தி வைப்பது ஜகத் ப்ரஸித்தம். அம்மாமுனிகள் நிற்க. மற்றையாசாரியர்களோடொப்ப நம் நிகமாந்த மஹா குருவும் எழுந்தருளிக் கொண்டிருந்தவர் 1872 ஆம் ஆண்டு முதலாக [அதாவது ஏற்றக்குறைவின்றி ஒரு நூறு வருஷ காலமாக] திவ்ய கோஷ்டியிலந்வயத்தை ஸ்வாமி தேசிகன் இழந்திருப்பதற்கு ஹேதுவை தேவரீ ரறியமாட்டாதா? *அறியுமுலகெல்லா மென்கிறார் பொய்கை யாழ்வார். தேசிகன் தம்முடைய திருநெற்றியில் சில பல நூற்றாண்டுகளாக அணிந்திருந்த திவ்யோர்த்வபுண்ட்ரத்தை க்ஷணகாலம் விபரீதமாக்கினதற்காக நீதிமன்றத்தில் ஆயிரத்தொரு ரூபா அபராதக் கட்டணம் செலுத்தி அதை மூன்று நீதிமன்றங்களிலும் ஊர்ஜிதப்படுத்திக் கொண்டு, ;ஸ்வாமியை அந்த திவ்ய கோஷ்டியில் அந்வயிக்கப் பெறாதபடி செய்து கொண்டிருப்பது தேசிக பக்தர்களின் செயலாகுமா என்பதை விவேகிக்க சக்தியில்லையே யந்தோ!

நம்மாழ்வார் திருவாய் திருமொழியில், தமது திருநெற்றியில் விளங்கும் ஊர்த்வ புண்ட்ரஸந்நிவேசத்தை ஸ்பஷ்டமாக அருளிச்செய்திருக்கின்றார். (1-9-10) *நெற்றியுள் நின்று என்னையாளும் நிரைமலர்ப்பாதங்கள் சூடிக், கற்றைத் துழாய் முடிக் கோலக் கண்ணபிரானைத் தொழுவார், ஒற்றைப்பிறையணிந்தானும் நான்முகனுமிந்திரனும் மற்றைய மரருமெல்லாம்* என்பது ஆழ்வார் பாசுரம். தமது திரு நெற்றியிலுள்ளதையே சிவனயனிந்திரன் முதலானாரெல்லாரும்

அணிந்து கொண்டிருப்பதாக ஸாதிக்கிறார். ஊர்த்தவ புண்ட்ர ஸந்நிவேசத்தை நிஸ்ஸந்தேஹமாகத் தெரிவிக்கிறார். [நிரைமலர்ப்பாதங்கள்] என்று முன்னேயுள்ள (நெற்றியுள் நின்றென்னையாளும்) என்னும் விசேஷணத்தை மறக்க வேண்டா. அதற்கு விசேஷ்யம் [நிரை மலர்ப்பாதங்கள்] என்பது. புண்ட்ரம் ஏகபாதாகார மென்பாரைத்தள்ளுகிறது (பாதங்கள்) என்பது. நாஸிகாமூலத்தில் கமலாகாரமான பீடத்தை ஆதரியாதாரைத் தள்ளுகிறது (நிரைமலர்) என்பது. மேலே நாலாம் பத்தில் "தண்டாமரை சுமக்கும் பாதப் பெருமானை" என்றருளிச்செய்வதை இங்குக் கூட்டி யநுஸந்திப்பது. ஆக ஆழ்வார் தமது விபவகாலத்தில் தம் திருநெற்றியில் அணிந்து கொண்டிருந்ததாகத் தெரிவித்தருளின புண்ட்ராகாரமே இற்றைக்கும் அர்ச்சாஸ்தலங்களனைத்திலும், ஸகல ஆழ்வாராசாரியர்களின் திருவவதாரஸ்தலங்களிலும் அநாதி காலமாக உலகம் ஸேவித்துவாராநின்றது. இது அநாதியன்றென்றும், இடையில் ஏற்பட்ட விபர்யயமென்றும் (அதாவது எம்பெருமானார் கூரத்தாழ்வானையிட்டுச் செய்வித்த சூதென்றும்) நீங்கள் எழுதியுள்ளீர். இதை நான் 25 வருஷகாலமாக நூல் தோறும் எழுதிவருகிறேன். இதற்கு வாயைக் கையைத் திறந்தவர்களல்லீர் நீங்கள். இது பற்றி ஏதாவது எழுதித்தொலைக்க வேணுமே யென்று இப்பொழுது ஏதோமருண்டு எழுதியிட்டோ மென்றல்லது வேறொன்றும் எழுதவல்லீரல்லீர். இது கிடக்கட்டும்; திருவரங்கம் பெரிய கோயிலில் அன்று முதலின்றறுயாகப் பிரபல மரியாதைகள் பெற்றுவரும் ஆசார்ய புருஷர்கள் பன்னிருவர். இப்பன்னிருவருள் ஒருவரைவது குடிலோர்த்வ புண்ட்ரமணிந்தவராகக் காண்கிறீரோ ஸ்வாமிந்! அக்காலத்தில் தேசிகனொருவர் மட்டும் குடிலோர்த்வ புண்ட்ரமணிந்து கொண்டிருந்தார் என்று தானே தேவரீர் ஸாதிக்க வேணும் ஸாதித்தருளீர்.

பட்டர் ஸ்ரீரங்கராஜஸ்தவத்தில் "ஜிதபாஹ்யஜிநாதிமணி ப்ரதிமா அபி வைதிகயந்நிவ ரங்கபுரே, மணி, மண்டப வப்ரகணந்! விதநே பரகாலவி:" என்று பொறித்து வைத்துள்ள சுலோகரத்னத்தின்படி விளங்கும் ப்ராகார கோபுரமண்டபாதிகளில் திகழும் திருமண்காப்பை ஸேவியாதவரா தேசிகன்? ஸேவித்திலர் என்கிறீரா? ஸேவித்து வைத்தும் "அந்யேந்த்ரகம் புவநம் அந்யதநிந்த்ரகம் வா கர்த்தும் க்ஷமே கவிரபூத யமந்வவாயே" என்று தாமே எழுதிவைத்திருக்கிற படியாயிற்று என்கிறவரீர்களா? உண்மையில் தத்வஜிஜ்ஞாஸயா கேட்குமடியேனுக்கு ஸ்வாமிந்! உண்மையை யுணர்த்தியருள வேணுமென்று ஸவிநயம் வேண்டுகிறேன். ஒரு நாளும் வடகலை ஸம்பந்த கந்தலவ லேசமுமில்லாத திருவல்லிக்கேணி திருவிந்தளூர் முதலான திருப்பதிகளில் தேசிக திவ்ய மங்கள விக்ரஹம் எப்படி புகுந்திருக்குமென்று ஆலோசிக்க மாட்டிற்றிலீரே.

திருக்கச்சி நம்பிகளை இற்றைக்கும் தைவமாகக் கொண்டிருக்கிறார்கள் பேரி செட்டிமார்கள். அவர்கள் தங்கள் நெற்றியிலிடுவது நீறுயிருந்தாலும் இதையே நம்பிகளுக்கும் அணியச் செய்யவேணுமென்று முயன்றிலர். நெஞ்சாலும் நினைத்திலர்.

ஸ்வாமிந்! மதுராந்தக மஹாஸ்வாமிந்! தேவரீர்கள் அணிந்துவரும் புண்ட்ரஸந்நிவேசத்தை நவீனமென்று நாம் சொல்லுகின்றிலோம், நெஞ்சாலும் நினைக்கின்றிலோம். இதுவும் அநாதியாகவே யிருக்கலாம். என்ன சொல்லுகிறோம்? நம்

முன்னோர்கள் ஆதரித்ததன்றிது. விசிஷ்ய தேசிகன் ஆதரித்ததன்று அன்று அன்று என்று உத்த்ருத்யபுஜ முச்யதே, குடப்பாம்பில் கையிட்டுரைக்கின்றேன். திருவவதார ஸ்தலமான விளக்கொளி சன்னிதியில் புண்ட்ரஸந்நிவேசம் மாறின காலத்தை (வைகுண்டவாஸியான) திருப்புட்குழியப்பா ஸ்வாமி நீதிமன்றத்தில் பாக்ஸிலேறி வெளியிட்டதைப் பலகால் ரிகார்டுகளுடன் வெளியிட்டிருக்கிறேன். பிஷ்ட பேஷணம் வேண்டா. ஆக, நாம் உபபாதிக்க ப்ரதிஜ்ஞை செய்த இருவகையில் ஒருவகையை உபபாதித்தாயிற்று. இனி இரண்டாவது வகை—(தேசிகனுதரித்த புண்ட்ரஸந்நிவேசத்திற் போல) அவராதரித்த அர்த்தங்களிலும் உங்களுக்கு அந்வயலேசமுமில்லை யென்பது.

## தேசிக திவ்யார்த்தங்களும் நவீனர்களும்

தேசிக திவ்யக்ரந்தங்களில் அநாயாஸமாக விளங்கும் அர்த்தங்களில் ஒன்றையும் தேவரீர்கள் ஆதரித்து வரவில்லை யென்பதை நூற்றுக்கு மேற்பட்ட நூல்களில் விவரித்துள்ளேன். அவற்றுள் ஒன்றையே இங்கெடுத்துக் காட்டுகிறேன். தேசிக ஹ்ருதயம் என்கிற அடியேனது நூல் ஏற்கனவே ப்ரஸ்தாவிக்கப்பட்டுள்ளது. அது ஸ்ரீ ராமாநுஜன் 141, 142 ஆகிய இரண்டு இதழ்களில் வெளியிடப் பட்டுள்ளது. தேவரீருடைய திருக்கோயிலாழ்வாரிலும் விளங்குமதே அது. முன்னுரையும் பதினாறு பரிச்சேதமுமுள்ள அந்த தேசிக ஹ்ருதயத்திலிருந்து முன்னுரையையும் முதல் பரிச்சேதத்தையும் மட்டுமே இங்கு வெளியிடுகின்றேனிதோ. ஸ்ரீ ராமாநுஜன் 141, 142 இதழ்களிலிருந்து அந்நூலைப் பூர்த்தியாகவே கொண்டு "இதுவன்றுதேசிகஹ்ருதயம், உண்மையான தேசிகஹ்ருதயத்தை இதோ நான் தெரிவிக்கிறேன்" என்ற பீடிகையிட்டுத் தெரிவித்தருள வேணும்.

# தேசிக ஹ்ருதயம்

வேதக் கடல்கடைந்த வேதாந்த வாசிரியன்
போதக் கடலாய்ப் புனிதமாய்க்—கோதற்ற
தேன்மொழிகள் தந்தருளித் தீய பொருள்திரளைத்
தாமொழித்தான் தாளே சரண்.

—: முன்னுரை :—

நாதோபஜ்ஞம் ப்ரவ்ருத்தம் பஹுபிருபசிதம் யாமுநேய ப்ரபந்தைஸ் த்ராதம் ஸம்யக் யதீந்த்ரைரிதமகிலதம:கர்சநம் தர்சநம் ந:" என்கிறபடியே, நம்மாழ்வார் திருவருளால் ஸகலார்த்த விசேஷங்களையும் நிதிபெற்றாற் போலே பெற்று வாழ்ந்த ஸ்ரீமந் நாதமுனிகள் அநுஸந்தித்துக்கொண்டிருந்த ஸத்ஸம்ப்ரதாயார்த்தங்களை மணக்கால்நம்பி வழியாக லபிக்கப்பெற்ற ஆளவந்தார் அவ்வர்த்த விசேஷங்களைத் தம்முடைய திவ்யகடாக்ஷ மூலமாகவும் பெரியநம்பி திருமலைநம்பி திருக்கோட்டியூர்நம்பி திருமாலையாண்டான் முதலான ஸ்வசிஷ்யவர்க்க மூலமாகவும் எம்பெருமானார் பக்கலிலே தேக்கியருள, அவை எம்பார் ஆழ்வான் பட்டர் நஞ்சீயர் நம்பிள்ளை முதலான ஆசாரியர்களின் வழியாகவும், திருக்குருகைப்பிரான் பிள்ளான் கிடாம்பியாச்சான் எங்களாழ்வான் நடாதூரம்மாள் முதலான ஆசார்

யர்களின் வழியாகவும் ப்ரவஹித்து அஸ்மதாதி ஸம்ஸாரி சேதநஸமுஜ்ஜீவந ஸாத னங்களாய் விளங்கி வாரா நின்றன.

மேலே நிர்தேசித்த ஆசார்யவர்யர்கள் பேசிற்றே பேசும் ஏககண்டர்களாகை யாலே இவர்களின் திவ்யஸூக்திகளிலே அர்த்தபேதம் காண்கைக்கு அவகாசமில்லை. ஸ்வல்ப யோஜனுபேதம் கண்டால் காணலாமத்தனை. இவ்வுண்மையை யுணராதார் சிலர், வேதாந்த வாசிரியர் தனிப்பட்டிருந்து வேறுபட்ட கொள்கைகளைக் கொண் டிருந்தாரென்றும், நம்பிள்ளை பிள்ளைலோகாசாரியர் முதலானார் கொண்டிருந்த கொள்கைகளை அசாஸ்த்ரீயங்களென்று கண்டித்துவிட்டாரென்றும் சொல்லிப் போருவது ஆதாரமற்றதென்பதையும், நவீநர்கள் ஆதரித்துவருகிற அர்த்தங்களுக் கும் ஆசரித்துப் போருகிற அனுஷ்டானங்களுக்கும் வேதாந்ததேசிக க்ரந்தங்களில் ஆதாரமில்லையென்பதையும் ஸாரமாகவும் ஸம்க்ஷேபமாகவும் உபபாதிப்போமிதில்.

... ... ... முன்னுரை முற்றும்

### உபய ஸம்ப்ரதாயத்திலுமுள்ள முக்கியமான ஒருவாசி

தென்னாசார்ய ஸம்பிரதாயத்தில் ஆதரிக்கப்படும் அர்த்தங்கள் எவை? வட கலை ஸம்பிரதாயத்தில் ஆதரிக்கப்படும் அர்த்தங்கள் எவை? என்று பலர் தெரிந்து கொள்ள விரும்புகிறார்கள். அவற்றை இன்னவை யின்னவையென்று அடுத்தபடி தெரிவிப்போம். அதற்கு முன்னே ஸாரமாக வொன்று தெரிவிக்கிறோம். நற்கதி பெறவேணுமென்கிற நசை இருகலையார்க்கும் துல்யமாயிருக்கச் செய்தேயும், நாம் பேறு பெறுவதற்கு முக்கிய ஸாதனம் பகவத் ப்ரவ்ருத்தியே யல்லது ஸ்வப்ரவ்ருத்தி யன்று என்பது தென்னாசாரியர்களின் கொள்கை. நம்முடைய ப்ரவ்ருத்தியினால் தான் நாம் பேறு பெற முடியுமென்பது மற்றையோர்களின் கொள்கை. இதுதான் இருகலையார்க்கும் தலையான பேதமென்று ஸாரமாகக் கொள்ளக்கடவது. மற்றைப் படியான பேதங்களாவன:—

| தென்கலை ஸம்ப்ரதாயார்த்தங்கள். | வடகலை ஸம்ப்ரதாயார்த்தங்கள் |
|---|---|
| 1. பகவத்க்ருபை நிர்ஹேதுகம். | 1. பகவத் க்ருபை ஸஹேதுகம் |
| 2. சேதநனைப்பெறுவது ஈச்வரனுக்குப் பேறு. | 2. ஈச்வரனைப்பெறுவது சேதநனுக்குப் பேறு |
| 3. பரகத ஸ்வீகாரமே நன்று | 3. ஸ்வகதஸ்வீகாரமேதான் உள்ளது |
| 4. ப்ரபத்தி அநுபாயம் | 4. ப்ரபத்தி உபாயம் |
| 5. பிராட்டிக்குப் புருஷகாரத்வ மாத்ரமே யுள்ளது; உபாயத்வமில்லை | 5. பிராட்டிக்கு புருஷகாரத்வத்தோடு மோக்ஷ ப்ரதாத்ருத்வமுமுண்டு. |
| 6. பிராட்டிக்கு அணுத்வமேயுள்ளது. | 6. பிராட்டிக்கு விபுத்வமே யுள்ளது |
| 7. பிராட்டிக்கு ஜகத்காரணத்வமில்லை | 7. பிராட்டிக்கு ஜகத்காரணத்வமுண்டு |
| 8. தயை என்பது பரதுக்கதுக்கித்வம் | 8. தயைபரதுக்க நிராசிகீர்ஷாரூபம் |
| 9. வாத்ஸல்யம் தோஷபோக்யதாரூபம் | 9. வாத்ஸல்யம் தோஷாதர்சித்வரூபம் |
| 10. ப்ரபந்நனுக்கு விஹிதவிஷய நிவ்ருத்தி தன்னேற்றம் | 10. விஹிதவிஷய ப்ரவ்ருத்தி அவர்ஜநீய மாகையாலே தத்வர்ஜநம் அசாஸ்த்ரீயம் |

| தென்கலை ஸம்ப்ரதாயார்த்தங்கள் | வடகலை ஸம்ப்ரதாயார்த்தங்கள் |
|---|---|
| 11. எம்பெருமானுடைய வ்யாப்தி பரிஸமாப்ய வர்தனம் | 11. எம்பெருமானுக்கு பரிஸமாப்ய வர்தநம் கிடையாது |
| 12. ஜாதி நசிக்கும் | 12 ஜாதி நசிக்கமாட்டாது |
| 13. உபாயாந்தரங்கள் ஸ்வரூப விருத்தம் | 13. உபாயாந்தரங்கள் ஸ்வரூபாநுரூபமே |
| 14. கைவல்ய மோக்ஷத்தில் புநராவ்ருத்தி கிடையாது | 14. கைவல்யமோக்ஷத்திற்குப் புநராவ்ருத்தியுண்டு |
| 15. நமஸ்காரத்தில் ஸக்ருதாவ்ருத்தி போதும் | 15. அஸக்ருந் நமஸ்காரம் வேண்டும் |
| 16. அத்ருஷ்டார்த்தாநுஷ்டானமென்று தனியே யில்லை. | 16. அத்ருஷ்டார்த்தாநுஷ்டானம் தனிப்பட ஆவச்யகம் |

இப்படியொரு பதினாறு விஷயங்களை வைத்துக்கொள்வோம். 'இப்பதினாறு விஷயங்களில்தானா பேதம்? வேறுகிடையாதா?" என்று கேட்கவேண்டாம். மற்றும் சிலவோ பலவோ இருக்கலாம்; அவை முக்கியமானவை யல்லவென்று விடுக்கத் தக்கன. முக்கியமான விஷயங்களை சர்ச்சிக்கும்போது அவாந்தர விஷயங்களாகக் கிளரும் பேதங்களை இங்குக் கொள்ளவில்லை.

மேலே காட்டிய பேத விஷயங்களில் தென்கலை ஸம்ப்ரதாயார்த்தங்களென்று நாம் காட்டியுள்ள அர்த்தங்களை தென்னாசார்யர்களென்று ப்ரஸித்தர்களான ஸதாசார்யர்களின் ஸ்ரீஸூக்திகளிற் போலவே ஸ்ரீமந் நிகமாந்த மஹாகுரு திவ்யஸூக்திகளிலும் காண்கிறோம். இதை மட்டும் விளக்கவே இச்சிறு நூல் அவதரிக்கின்றது. இதர ஆசார்ய ஸூக்திகளையும் காட்டி விஸ்தரம் செய்யாமல் தேசிகஸூக்திகளை மட்டுமே காட்டி நிற்போமிதில்.

## பகவத்க்ருபை நிர்ஹேதுகம்

பகவத்க்ருபையை நிர்ஹேதுகமென்று கொண்டால் ஸர்வமுக்தி ப்ரஸங்கம் வருமென்றும் வைஷம்யநைர்க்ருண்யா பத்தியைப் பரிஹரிக்கின்ற "வைஷம்யநைர்க்ருண்யே ந ஸாபேக்ஷத்வாத்" என்கிற ப்ரஹ்ம ஸூத்ரம் விரோதிக்குமென்றும் சில வாதங்கள் கிளம்புவதுண்டு. உலகத்திலுள்ள ஸகல ப்ராணிகளிடத்திலும் எம்பெருமான் நிர்ஹேதுகமாகவே அருள் செய்வதாகக் கூறினால்தான் மேற்சொன்ன வாதங்களுக்கு ப்ரஸக்தியுண்டு. அப்படி யாரும் கொள்வதில்லை. அதிகாரிவிசேஷங்களிடத்தில் நிர்ஹேதுகமாக அருள்செய்கிறானென்றே ஸகலாசார்யர்களுமருளிச்செய்வது. இக் கொள்கையில் தேசிகன் வேறுபாடு கொண்டவரல்லர். நிர்ஹேதுக க்ருபையைப் பற்றிப் பல விடங்களிற் பேசுகிறார். சில விடங்கள் காட்டினால் போதுமன்றோ.

பரமபத ஸோபாநத்தில்—"அஜ்ஞாதயாத்ருச்சிக ஆநுஷங்கிக ப்ராஸங்கிக ஸாமான்ய புத்திமூல ஸுக்ருத விசேஷங்களை வியாஜமாகக்கொண்டு விசேஷ கடாக்ஷம் பண்ணி." என்றருளிச்செய்தார், இதில் "வ்யாஜமாகக் கொண்டு" என்றதையும் ஸஹியாமல் அவ்யாஜ க்ருபையையும் அருளிச்செய்து போந்தார். அது எங்கேயென்னில்;

திருவாய்மொழியில் முதற்பத்தில் *பொருமா நீள்படையென்கிற பத்தாவது பதிகத்திற்கு ஆறுயிரப்படியிலில்லாத விஷயம் அவ்வாறுயிரப்படிக்குப் பிற்பட்ட வியாக்கியானங்களிலுள்ளது. அதாவது, இப்பதிகத்தினுல் ஆழ்வார் எம்பெருமானுடைய நிர்ஹேதுக க்ருபா ப்ரபாவத்தை யநுபவிக்கிறுரென்று பட்டர் நிர்வஹித்தருளினதாகக் காட்டப்பட்டது. அந்த நிர்வாஹத்தையே தேசிகன் ஆதரித்து த்ரமிடோபநிஷத்தாத்பர்ய ரத்நாவளியில் "ஆதாவித்தம் பரத்வாத்" என்கிற ச்லோகத்தில் "அவ்யாஜோதாரபாவாத்" என்றருளிச்செய்தார். நிர்ஹேதுகக்ருபா விசிஷ்டனுகையாலே என்றபடி. இவ்விடத்தில் இரண்டு விசேஷங்கள். (1) எம்பெருமானை நிர்ஹேதுகக்ருபாவானுகச் சொன்னது ஒன்று; (2) இவ்விஷயம் ஆறுயிரப்படியில் இல்லாமல் அதற்குப்பின் தோன்றிய வியாக்கியானங்களில் மட்டும் விளங்காநிற்கவும் இதையே ஆதரித்துப் பரிக்ரஹித்தது மற்றென்று.' இவற்றுல் தேறும் பரமார்த்தம் யாதெனில்; ஆறுயிரப்படிக்குப் பின் தோன்றியுள்ள வியாக்கியானங்களிற் காணும் அபார்த்தங்களை யெல்லாம் நிகமபரிமளமென்னும் கக நாரவிந்த பரிமள க்ரந்தத்தில் களைந்தொழித்தார் நம் தேசிகனென்று ஆகாச தாண்டவமாடுமவர்களின் குஜல்பிதங்களைக் கிள்ளிக் களைந்ததேயாம். இந்த வட்டத்தில் முந்துற முன்னமெடுத்துக்காட்டிய பரமபத ஸோபாந ஸ்ரீஸூக்தியானது, ஸ்ரீவசந பூஷணம் நான்காவது ப்ரகரணம் ஆரம்பத்திலுள்ளதான

> "த்ரிபாத்விபூதியிலே பரிபூர்ணுநுபவம் நடவாநிற்க......என்னுரைச் சொன்னுய் என்பேரைச் சொன்னுய் என்னடியாரை நோக்கினுய் அவர்கள் விடாயைத் தீர்த்தாய் அவர்களுக்கொதுங்க நிழலைக் கொடுத்தாய் என்னுமாபோலே சில வற்றை ஏறிட்டு மடிமாங்காயிட்டு ... ஜந்ம பரம்பரைகள் தோறும் யாத்ருச்சிகம் ப்ராஸங்கிகம் ஆநுஷங்கிகமென்கிற ஸுக்ருதவிசேஷங்களைக் கற்பித்துக் கொண்டு தானே அவற்றை ஒன்று பத்தாக்கி நடத்திக்கொண்டு போரும்"

என்கிற ஆச்சரியமான சூர்ணையை தேசிகன் அநவரதம் சிந்தனை செய்து போந்தவரென்பதைப் பேதையருமறியும்படி அமைந்துள்ளது.

தயாசதகத்தில் "நிஷாதாநாம் நேதா கபிகுலபதி: காபி சபரீ குசேல: குப்ஜா ஸா வ்ரஜயுவதயோ மால்யக்ரு திதி, அமீஷாம் நிம்நத்வம் வ்ருஷகிரிபதேருந்நதிமபி ப்ரபூந்தஸ் ஸ்ரோதோபி: ப்ரஸபமநுகம்பே ஸமயஸி" என்கிற ச்லோக ரத்நத்தின் பொருளை உபந்யஸிக்கப் புக்கால் குஹப்பெருமாள் ஸுக்ரீவ மஹாராஜர் சபரி குசேலர் கூனி ஆய்ச்சியர் மாலாகாரர் என்னுமவர்கள் இராமபிரானுடையவும் கண்ணபிரானுடையவும் நிர்ஹேதுக கருணைக்கு இலக்கானவர்கள் என்றல்லது வேறென்று சொல்லிப் பிழைக்கவொண்ணுதாயிற்று.

ஸ்தோத்ர க்ரந்தங்களில் பணிப்பது ப்ரசம்ஸைகபரமாதலால் அதுதன்னை ப்ராஸ்துதார்த்தமாகக் கொள்ள வொண்ணுதென்று கூற வருவீர்கள். முநிவாஹந போகமென்று பெயரிட்டு ரஹஸ்ய க்ரந்தமாகப் பணித்த அமலனுதிபிரான் வியாக்கியானத்தின் உபக்ரம ஸ்ரீஸூக்தி அது காணீர்;—"காரணவிசேஷம் இன்னதென்று அறுதியிட அரிதாயிருப்பதொரு பகவத் கடாக்ஷத்தாலே........................" என்று. இவ்விஷயத்தில் இவ்வளவே போதும். ஒரு ஹேதுவில்லாமல் எம்பெருமான் அருள் செய்யமாட்டானென்கிற வாதம் ஸ்ரீவைஷ்ணவ கோஷ்டிகளில் விலை செல்லுமதன்று.

இங்கு விவரித்த விஷயங்களுக்கெல்லாம் ஸாரமாக தேசிக ஸூக்தியொன்றை யே காட்டி இப்பரிச்சேதத்தை நிகமிக்கிறேன். தேசிகன் ரஹஸ்யத்ரய ஸாரத்தில் "த்ராணே! ஸ்வாமித்வ மௌசித்யம்! ந்யாஸா த்யாஸ் ஸஹகாரிண:, ப்ரதாந ஹேதுஸ் ஸ்வாதந்த்ர்ய விசிஷ்டா கருணா விபோ:." என்று ஸாதித்திருக்கிற காரிகை தேவரீருக்கு மனப்பாடமாயிருக்குமே. விபோ: கருணைவ ப்ரதாநஹேது: என்றார்; அப்படியானால் ஸர்வமுக்தி ப்ரஸங்கம் வருமே! என்ன; [ஸ்வாதந்த்ர்ய விசிஷ்டா] என்று கருணைக்கு விசேஷண மிட்டருளினார். "பட்டத்துக்குரிய ஆனையும் அரசும் செய்யுமவை ஆராயாது" என்ற ஆசார்ய ஹ்ருதய ஸூக்தியைப் பின்பற்றினரா யிற்று. "ந்யாஸாத்யாஸ் ஸஹ காரிண:" என்றாரிங்கு. ஸஹகாரிகளுக்கு உபாயத்வம் சொல்லலாமென்று பார்த்தாலோ அதற்கும் வாய் மூடி போட்டு விட்டார் ந்யாய ஸித்தாஞ்ஜனத்தில். "கிம்புநஸ் ஸஹ காரிணம்" என்று. அந்த சுலோகமும் தேவ ரீருக்குக் கண்ட பாடந்தானே. "இயம் கேவல லக்ஷ்மீ சோபாயத்வப்ரத் யயாத் மிகா, ஸ்வஹேதுத்வநியம் ருந்தே கிம்புநஸ் ஸஹகாரிணம்" என்பது அந்த சுலோ கம். இதில் (லக்ஷ்மீச்ச ஈசச்ச) என்று தேவரீர் காட்டினது பரமபோக்யம். பரம ரஸ்யம். அதுகிடக்க, (ஸ்வஹே துத்வநியம் ருந்தே) என்றதற்கு என்ன பொருள்? ஸாதித்தருளவேணும் ஸ்வாமிந்!

## பாலவேடு ஸ்வாமியின் திகைப்பு

ஸ்ரீ பெரும்பூதூர் ஸமீபத்தில் பாலவேடு என்பதொரு அக்ரஹாரம். அவ் விடத்தில் ரங்கராமாநுஜாசாரியர் என்றொரு பண்டிதரிருந்தார். அவர் தேசிக பக் தம் மந்யர். அவர் எம்பெருமானாருத்ஸவத்திற்கு நியமேநவருவர்; அக்காலத்தில் ஸ்ரீ பெரும்பூதூர் கலாசாலையில் ஸ்ரீ மதுபயவே சதுச்சாஸ்த்ர வித்வான் குண்டலம் நரஸிம்ஹாசாரியர் ஸ்வாமி தலைவராக எழுந்தருளியிருந்தார். அடியேன் பதினை காவது வயதில் அவ்விடம் உத்ஸவத்திற்கு விடை கொண்டிருந்தேன். பாலவேடு பண்டிதர் குண்டலம் ஸ்வாமியோடு வார்த்தையாடிக் கொண்டிருக்கையில் (மூலை மண்டபத்தில்) அடியேனும் கூட நிற்கிறேன். பாலவேடு பண்டிதர் குண்டலம் ஸ்வாமியிடம் சோத்யம் செய்கிறார் (என்னவென்றால்) மணவாள மாமுனிகள் ஸாதித் தருளின எம்பெருமானார் வாழித் திருநாமத்தில் "அறு சமயச் செடியதனை அடி யறுத்தான் வாழியே" என்றதையும், சங்கர பாஸ்கர யாதவ பாட்டப்ரபாகரர் தங்கள் மதம்" என்றதையுமெடுத்துக்கொண்டு, "ஒன்றில் அறுசமயச்செடியதனையடி யறுத்ததாகச்சொன்னவர் மற்றொன்றில் சங்கர-பாஸ்கர-யாதவ-பாட்ட-ப்ரபாகரர் களாகிற ஐவரையே எடுத்துக்காட்டினார், அறுசமயங்களில் ஒன்று விட்டுப்போயிற்றே இது அஸங்கதமல்லவா? என்று அட்ட ஹாசம் செய்கிறார் பாலவேடு பண்டிதர். குண்டலம் ஸ்வாமி அதற்குப் பதில் ஸாதிப்பதற்கு முன்னே அடியேன் சொன்னேன் "சங்கர......ப்ரபாகரர் என்றவுடனே (தங்கள் மதம்) என்றிருப்பதை மறந்து விட் டீரே ஸ்வாமிந்! ஆறுவதாகத் தங்கள் மதம் சொல்லப்பட்டிருக்கிறதே, சங்கராதி பஞ்சமதபஞ்ஜனத்தோடு தங்கள் மதத்தையும் பஞ்ஜனம் செய்திருக்கிறரே உடை யவர்" என்றேன். அதற்கு அவர் "தங்கள் மதமென்றால் என்ன அர்த்தம்?" என்றார். "தங்கள் வீட்டில் எல்லாரும் க்ஷேமமா?" என்றால் என்ன அர்த்தமென்று கேட்டேன். உங்கள் வீட்டிலென்று அர்த்தமென்றார். அதே போல இங்கும் தங்கள் மத மென்ற

தற்கு உங்கள் மதமென்று பொருள்; சங்கராதி மதங்களோடு கூட உங்கள் மதத்தையும் அடியறுந்தாருடையவர் என்று சொல்லியிருப்பதால் இதிலும் ஆறு மதமே சொல்லப் பட்டதாயிற்று என்றேன். அசந்து போனார் பால வேடர்; எங்கள் மதத்தையும் (அதாவது வடகலை மதத்தையும்) ஸ்ரீபாஷ்யகாரர் அடியறுத்து விட்டாரென்கிறீரோ? என்று உறுமுகிறார். தேவரீர் கேட்டதற்கு ஸமாதானம் வந்ததா இல்லையா? என்கிறார் குண்டலம் ஸ்வாமி. அப்போது அங்கே பெருந்திரள் கூடி விட்டது. மதுராந்தக ஸ்வாமிந்! 68 ஆண்டுகளுக்கு முன்பு நிகழ்ந்தவிது இப்போது (ஸ்வ ஹேதுத்வதியம் ருந்தே) என்ற இப் ப்ரஸங்கத்தில் நினைவுக்கு வந்தது. இங்கு ஸ்வ சப்தம் ஹேதுத்வத்தில் அந்வயிப்ப தன்று, ஹேதுத்வ தீயில் அந்வயிப்பது. மதுராந்தக ஸவாமி போல்வாரான தங்களுக்குண்டாகி யிருக்கிற ஹேதுத்வ புத்தியைத் தடுக்கின்ற தென்கை.

இளமை தொடங்கி அடியேன்பால் பரமக்ருபை கொண்டிருக்கும் மதுராந்தக மஹாஸ்வாமிந்! ஸ்ரீராமாயணத்தில் பெருமாள் சித்திர கூடத்தை விட்டுப் புறப்பட்டபின் அத்ரிபகவானுச்ரமத்திற்கெழுந்தருளினமை கூறப்பட்டதல்லவா? அங்கு அத்ரிபகவானுடைய தேவியான அநஸூயை பிராட்டிக்குப் பதிவிரதா தருமமுரைக்கின்றாள். அது மிகச்சிறந்த கெட்டம். குலமகட்குக் கொழுநனே தெய்வமென்பதும், அந்தக் கொழுநன் குணவானாயினும் குணஹீனனாயினும் ஆதரணீயனேயென்பதும் அவ்விடத்து ஸம்வாதத்தினால் தேர்ந்த பொருளாம். நம்மாழ்வாரும் *கடியன் கொடியன் நெடியமாலென்கிற பாட்டில் "ஆகிலுங்கொடிய வென்னெஞ்சம் அவனென்றேகிடக்கு மெல்லே" என்பதனால் இதையே அருளிச்செய்து வைத்தார். இதை இங்கு எதற்காக எழுதுகிறேன் தெரியுமா? தேசிகன் உங்களுக்கு வாய்த்த குருவாயிருந்தால் ஆகிலுங் கொடிய வென்னெஞ்சமென்கிற பாசுரப்படி மன்றுடிக்கிடக்கலாம். அவருடைய விபவாவதாரத்தோடு அர்ச்சாவதாரத்தோடு வாசியற அவரோடு ஒருவகைத் தொடர்பு மில்லாத நீஙகள் எதற்காக வீண்வம்பு வியவஹாரங்களில் தலையிடுவது. இதை நான் இன்று புதிதாகக் கேட்கவில்லை; நெடுநாளாகக் கேட்டு வருகிறேன்.

தேசிகனருளிய நூல்களோ அபரிமிதம். அவை வியாக்கியான ஸாபேக்ஷங்களுமானவை. சததூஷணிக்கோ நியாயபரிசுத்திக்கோ தென்கலை வித்வான்கள் வியாக்கியானமிட்டிருக்கிறார்களே யல்லது உங்கள் வகுப்பினர் ஒன்றுக்காவது உரை செய்ய நினைத்தவர்களுமல்லர். ரஹஸ்ய த்ரய ஸாரத்திற்குப் பஞ்ச வியாக்கியானமென்று தெலுங்கு லிபியிலும், இரண்டு வியாக்கியானமென்று தமிழ் லிபியிலும் அச்சிட்டிருக்கிறீர்கள், அவை என்றைக்குத் தோன்றியவை யென்பது உங்களுக்குத் தெரியாமலா இருக்கிறது? சர்வித சர்வணமும் பிஷ்ட பேஷணமும் செய்ய எனக்கே வெட்கமாயிருக்கின்றது. ஸ்ரீரங்கத்தில் தெருவுக்கொரு தேசிகன் ஸன்னிதியைக் கட்டுவிக்க முயன்ற காலம் உங்களுக்குத் தெரியாமலில்லை. அதே காலந்தான் நீங்கள் தேசிகனை யறிந்த காலமும் அவரைப் பிடித்துக் கொண்ட காலமுமென்னத் தட்டில்லை. இல்லையில்லை, எழுநூற்றாண்டாகவே அவரோடு தொடர்புடையோம் என்னில் அதை ப்ராமாணிகர்கள் உகக்கவும் உங்கள் உள்ளம் உகக்கவும் க்ரந்த ப்ரமாண ப்ரதர்சன பூர்வகமாக உபபாதிக்க வேண்டுகிறேன். அடுத்த படியாகக் கேட்கும் கேள்விகளுக்கு விடை தந்தருள வேணும். ப்ரதிபத்திகளாகச் சிலவற்றை யெழுதி அலமர வேண்டா.

மதுராந்தகம் ஸ்வாமிந்! அடியேன் இங்குக் கீழே காட்டும் தேசிக திவ்யஸூக்திகளின் பொருளைக் காடுபாயாமல் தேவரீர் விவரித்தருளி ஸ்வகோஷ்டியாரை உகப்பிக்கவேணும்.

1. த்ராணே ஸ்வாமித்வ மௌசித்யம் ந்யாஸாத்யாஸ் ஸஹகாரிண:, ப்ரதாந ஹேது: ஸ்வாதந்த்ர்யவிசிஷ்டா கருணாவிபோ:.'' (ரஹஸ்யத்ரயஸாரே.)

2. ''உபாயஸ் ஸ்வப்ராப்தே ருபநிஷததீதஸ் ஸ பகவான் ப்ரஸத்த்யை தஸ் யோக்தே ப்ரபதந நிதித்யாஸநகதீ, ததாரோஹ: பும்ஸாம் ஸுக்ருதபரிபாகேந மஹதா நிதாநம் தத்ராபி ஸ்வயமகில நிர்மாணநிபுண: ''

3. '' ஸ்வப்ராப்தௌ ஸ்வயமேவ ஸாதநதயா ஜோகுஷ்யமாண: ச்ருதௌ.''

4. '' *கர்த்தா சாஸ்த்ரார்த்தவத்த்வாத்* என்கிறபடியே ஜீவனுக்கு கர்த்ருத்வம் ப்ராமாணிகமேயாகிலும் இது பராதீனமுமாய் அல்பவிஷயமுமாய் ப்ரதிஹதி யோக்யமுமா யிருக்கும். ஆகையால் இவன்தான் உபாயாநுஷ்டானம் பண்ணிற்றும் *வரத? தவ கலு ப்ரஸாதாத் ருதே சரணமிதி வசோபி மே நோதியாத்* என்று சொல்லுகிறபடியே அவன் கடாக்ஷமடியாக வருகையால் அவனாலே ப்ரேரிதனாய், அவன் ஸஹகரியாதபோது நீட்ட முடக்க மாட்டாதே அவன் காட்டின வுபாயத்தை, அவன் துணைசெய்ய அநுஷ் டித்து அவனால் கொடுக்கப்படுகிற பலத்துக்கு சாதகம்போலே அண்ணாந்திருக்கிற விவனை ஸ்வாதீந ஸர்வவிஷய அப்ரதிஹத கர்த்ருத்வமுடையவனோடே துல்யமாக இரண் டாம் ஸித்தோபாயமாக வெண்ணுகை விவேகியான முமுக்ஷுவுக்கு உசிதமன்று... * என்னுணர்வினுள்ளே யிருத்தினேன் அதுவுமவனதின்னருளே யென்றும் * இசைவித் தென்னையுன் தாளிணைக் கீழிருத்துமம்மானே யென்றுஞ் சொல்லுகிறபடியே உபாயம் அவன் செய்விக்கச் செய்கிற வ்யாஜ மாத்ரத்தை அவனோடொக்க உபாயமாக வெண் ணுகை உசிதமன்றென்று ஏக சப்தத்துக்கு தாத்பர்யம் '' என்கிற ஸ்ரீஸூக்திகள் உள்ளன. [இந்த ஸ்ரீஸூக்திகளுக்கு விரிவான வியாக்கியான மருளவேணும் ஸ்வாமிந்.]

5. ஸ்ரீமத் ரஹஸ்யத்ரய ஸாரத்தில் பரிபூர்ண ப்ரஹமாநுபவாதிகாரத்தில் '' ஈச்வரனுக்குச் சத்ரசாமராதிகளைப் போலே லக்ஷணமாகச் சொன்ன ஜகத்காரணத்வ—மோக்ஷப்ரதத்வ—ஸர்வாதாரத்வ—ஸர்வநியந்த்ருத்வ—ஸர்வசேஷித்வ—ஸர்வசரீரித்வ—ஸர்வசப்தவாச்யத்வ—ஸர்வவேத வேத்யத்வ—ஸர்வலோக சரண்யத்வ—ஸர்வபலப்ர தத்வ—லக்ஷ்மீஸஹாயத்வாதிகள் ப்ரதிநியதங்கள் '' என்றருளிச்செய்யப்பட்டது. (இந்த மஹாவாக்யத்தில் ஜகத்காரணத்வத்தை முந்துறச் சொல்லி முடிவில் லக்ஷ்மீஸஹாயத் வத்தைச் சொல்லியிருக்கையாலே, லக்ஷ்மியினிடத்தில் லக்ஷ்மீஸஹாயத்வம் எப்படி அஸம்பாவிதமோ அப்படியே ஜகத்காரணத்வாதிகளும் அவளுக்கு அஸம்பாவிதமென்றும் இவையெல்லாம் பரப்ரஹ்மத்திற்கே பொருந்துமென்றும் காட்டப்பட்டதாயிற்று. மதுராந்தகம் ஸ்வாமி இதைப்பற்றின தெளிவைப் பிறப்பிக்கவேணும்.

6. ரஹஸ்ய ரத்னாவளியில் '' ஸ்ரீமானான நாராயணனொருவனுமே ஸர்வஜீவர் களுக்கும் தஞ்சம்......ஸர்வஸ்வாமிநியாய் ஸர்வேச்வரனுக்கு சேஷமாய் ஸஹதர்ம

சாரிணியான பெரியபிராட்டியார் இத்தலையில் வாத்ஸல்யாதிசயத்தாலும் அத்தலையில் வால்லப்யாதிசயத்தாலும் புருஷகாரமாய்க் கொண்டு இஜ்ஜீவர்களுக்குத் தஞ்சமாகிருள்''

7. ஆளவந்தாரருளிய கீதார்த்த ஸங்க்ரஹத்திற்கு தேசிகனிட்டருளின ரக்ஷையில் ''உபாயத்வ புத்திரபிநோசிதா'' என்றுள்ள ஸ்ரீஸூக்திக்கு தேவரீர் ஒரு ரக்ஷையிட்டருளவேணும். (*நிஜகர்மாதி பக்த்யந்தம்...உபாயதாம் பரித்யஜ்ய* என்றவிடத்தில்)

8. நியாஸதிலகத்தில் * ஆர்த்தேஷ்வாசு பலா * என்ற சுலோகத்திற்கும் * ஹேதுர்வைதே விமர்சே* என்கிற சுலோகத்திற்கும், * த்வய்யேகஸ்மிந்நபி விஜஹதோ முக்தவத் ஸாதநத்வம் * என்கிற சுலோகத்திற்கும் * புங்க்தே போகாந் அவிதிதந்ருபஸ்ஸேவகஸ்யார்ப்பகாதி: * ச்ருத்வா வரம் தததுபந்த மதாவலிப்தே * இத்யாதிகளுக்கும் தேவரீர் யாவரும் தெளியுமாறு உரையிட்டருளவேணும்.

9. ஸ்தோத்ரரத்னத்தில் * க்ஷணேபி தே யத்விரஹ: அதிதுஸ்ஸஹ: * என்றவிடத்து (ஸ்தோத்ர) பாஷ்யத்தில் ''துஸ்ஸஹ சப்தேந கேதோ ந விவக்ஷித:'' என்றெழுதினர். ஆனந்தமயனான எம்பெருமானுக்கு துக்கமுண்டாவதாகச் சொல்லுவது தவறு என்கிற திருவுள்ளத்தினால். இப்படி யெழுதினவர்தாமே தயாசதகத்தில் ''அசித விசிஷ்டாந் ப்ரலயே ஜந்தூநவலோக்ய ஜாதநிர்வேதா'' என்றார். தயாளுவின் தன்மையை தயையிலேறிட்டுச் சொன்னபடி. பட்டர் அருளிச்செய்த ''அசிதவிசேஷிதாந் ப்ரலயஸீமநி ஸம்ஸரத: கரணகலேபரைர்க் கடயிதும் தயமாநமநா:'' என்றருளிய ஸ்ரீஸூக்தியை அநுவதித்த தேசிகன் தயமாந மநஸ்கத்வமாவது ஜாதநிர்வேதத்வமென்று விளக்கினாராயிற்று. இதுதன்னிலும் சிறிது திருவாய்மலர்ந்தருளவேணும்.

10. அந்த தயாசதகந்தன்னிலேயே ''அபராதசதைரபூர்ணகுக்ஷி கமலாகாந்த தயே! கதம் பவித்ரீ'' என்றும், ''ப்ரபல வ்ருஜிந ப்ராப்ருதப்ருதாம்'' என்றும் அருளிச்செய்கிறார். ''அங்கீகாரத்திற்கு அபராதங்களையே பச்சையாகக் கொள்ளுகையென்கிற ஸ்ரீவசனபூஷண திவ்யார்த்தம் இந்த ஸ்ரீஸூக்திகளில் கமழுகின்றதாயிற்று. இதுதன்னிலும் மதுராந்தகம் ஸ்வாமி தினவடங்கத் திருவாய்மலர்ந்தருள வேணும்.

11. ஸ்ரீ மதுராந்தகம் ஸ்வாமிந்! எத்தனையோ ஆசாரியர்களின் திருநாமங்களைத் தமது திவ்யக்ரந்தங்களில் பொறித்திராநின்ற தேசிகன் திருக்குருகைப்பிரான் பிள்ளான் திருநாமத்தைத் தொட்டவரேயல்லர்; அவர், திருவாய்மொழிக்கு ஆறுயிரப்படியென்றொரு வியாக்கியான மருளிச்செய்திருப்பதாக ப்ரஸ்தாவமாத்திரமும் செய்திலர். (யார்? நம் தேசிகன்) ஆறுயிரப்படியென்று ஒன்றிருந்ததாகத் தெரிந்துகொண்டவருமல்லர் தேசிகன். மணவாளமாமுனிகள் உபதேசரத்தின மாலையில் ''தெள்ளாரும் ஞானத் திருக்குருகைப்பிரான் பிள்ளான், எதிராசர் பேரருளால் உள்ளாரு மன்புடனே, மாறன் மறைப்பொருளை யன்றுரைத்தது, இன்பமிகுமாறுயிரம்.'' என்கிற பாசுர மருளிச்செய்தது கொண்டே உலகம் ஆறுயிரப்படி யென்று ஒன்று அவதரித்ததாக அறிந்துகொண்டது—என்றிப்படி அடியேன் பலகால் எழுதி வெளியிட்டிருப்பதை தேவரீர் கடாக்ஷியாதவரல்லீர். இஃது உங்கள் வகுப்பினரால் அவசியம் கண்டிக்கத் தக்கதல்லவா? நாங்கள் ஆறுயிரப்படி யென்றுதான் சொல்லிவருகிறோம். நீங்கள் திருவாறுயிரப்படி யென்று சொல்லத் தலைப்பட்டீர்கள். அந்தத் திருவாறுயிரப்படிக்கும் தேசிகனுக்கும் ஸம்பந்தகந்தமுமில்லை என்கிற எனது நிருபணங்களை—உபபாதனங்களை வேரறுக்கப் பார்க்கவேண்டியது தேவரீர்களுக்கு மிக அவசியமானது. பார்க்கவல்லீரோ?

# அவ்வளவேயன்று, மேலுங்கேளீர்

(பிள்ளானது திருவாக்கை தேசிகன் தூஷித்தது)

12. ரஹஸ்யத்ரயஸாரத்தில் ''மத்யோபஹத பாத்ரஸ்ததீர்த்த த்ருஷ்டாந்த வர்ணநம், அஹங்காராந்வயே து ஸ்யாத் ப்ரபத்தாவபி பக்திவத்'' என்றொரு காரிகை யுள்ளது. இது ஒருவருடைய வார்த்தைக்கு மறுப்பாகத் தோன்றிய காரிகையென்பது வெட்டவெளிச்சம். ஸ்ரீமத் பரமஹம்ஸ. இஞ்சிமேட்டழகியசிங்கர் திருக்குருகைப்பிரான் பிள்ளான் வார்த்தைக்குக் கண்டனமென்பதை மறைத்துவைக்க முடியாமல் தமது வியாக்கியானத்தில் விளக்கியருளியுள்ளார். இதையுமடியேன் பலகால் எழுதி வெளியிட்டுள்ளேன். இதைப்பற்றியும் தேவரீருடைய திருவெழுத்து வெளிவரவேண்டும்.

13. இதையுங் கேட்டருளீர். தேசிகன் அமலனாதிபிரானுக்குமட்டும் வியாக்கியானமிட்டருளத் தேவையில்லை. இட்டருளினார். அதற்கு முநிவாஹனபோகமென்று பெயரிட்டார். அப்பெயருக்கு என்ன அர்த்தம் ஸ்வாமிந்! லோகஸாரங்கமஹா முனிகள் ஜகந்ய ஜாதீயரான வொருவரைத் தோளில் தூக்கிக்கொண்டு போயிருக்கவேமாட்டார், அது அபத்தமான ஐதிஹ்யம் என்று தாம் சொல்லிக்கொண்டிருந்ததைத் தாமே மறுத்துக் கொண்டதைக் காட்டினபடியல்லவா இது. முடிவில் பார்க்க. ''வேண் பெரிய விரிதிரை நீர் வையத்துள்ளே வேதாந்தவாரிய னென்றியம்பநின்றோம், நாண் பெரியோமல்லோம் நாம் நன்றுந் தீதும் நமக்குரைப்பா ருளரென்று நாடுவோமே'' என்று தலைக்கட்டினார். இவ்வளவு விநயபேசலமான திருவாக்கு வேறு எங்கேனுங் கண்டதுண்டோ? இங்கே இது எதற்காகவென்று கேட்கிறேன். சொல்லுமையா!

14. சில்லரை ரஹஸ்யமொன்றின் முடிவில் ''விசுத்த தேசிகவதா ரங்கதாம்நி வ்யலிக்க்யதா'' என்கிறார் ஸ்வாமி. ரங்கதாம்நி கிடைத்த விசுத்த தேசிகர் யார் ஸ்வாமிந்! ''ரங்காஸ்தாநே ரஸிகமஹிதே ரஞ்ஜிதா சேஷ சித்தே வித்வத் ஸேவாவிமல மநஸா வேங்கடேசேந'' என்றதன் பொருளையும் அந்தோ! அறியகில்லீர்.

(முடிவில் ஒரு சிறுகதை)

# தகப்பனாரும் குமாரர்களும்

ஒரு பெரியவர் விலையுயர்ந்த மூன்று மோதிரங்கள் அணிந்துகொண்டிருந்தார். அவர்க்குக் குமாரர்கள் மூவர். அம்மூவர்க்கும் மூன்று மோதிரங்களையும் ஒவ்வொன்றாகக் கொடுத்துத் திருநாடுபுக்கார். கடைக் குமாரன் நாலாயிரம் ரூபா விலையுள்ள மோதிரத்தை (மதிப்பறியாமல்) ஐம்பது ரூபாய்க்கு விற்று நாலுநாளில் தின்றொழித்தான். இடைக்குமாரன் தனக்குக் கிடைத்த மோதிரத்தின் மதிப்பை நன்கறிந்தவனாதலால் சரியான விலைக்கு விற்று அதுகொண்டு நீண்டகாலம் வாழ்ந்தான். மூத்த குமாரன் அதை விற்பனைசெய்ய நினையாமல் ஸ்வயம் போக்யமாகக்கொண்டு அதைத் தானே அணிந்துகொண்டு பெரு மதிப்புப்பெற்று வாழ்ந்துவந்தான். ப்ரபத்தி விஷயத்தில் இக் கதையை நினைப்பது. ப்ரபத்தியைக் கொண்டு சிலர் அல்ப பலன்களைப் பெறுவர். சிலர் மோக்ஷமாகிற உயர்ந்த பலனைப் பெறுவர். சிலர் அதனை எதற்கும் ஸாதனமாக்காதே ஸ்வயம் போக்யமாகவும் நித்யாநுஸந்தேயமாகவும் கொள்வர். தேவரீர்கள் எந்த குமாரனுடைய வகுப்பில் சேர விரும்புகிறீர்களோ?

## — உபஸம்ஹாரம் —

ஸ்ரீ மதுராந்தக ஸ்வாமிந் அம்ருதஸாகராந்தர்நிமக்ந ஸர்வாவயவனாக இருக்குமிருப்பிலே இந்த லேகனங்கள் ப்ராப்தமானதற்கு மிக வருந்தவேண்டியே யிருக்கின்றது. தற்காலம் இதை உபஸம்ஹரிக்கிறேன். தேசிகனுடைய திவ்யஸூக்திகளில் தேவரீர் போல்வார்க்கு உபாதேயங்களானவை மிகச் சிலவேயாகும். அவை பூர்வோத்தர விருத்தங்களென்று கழிக்கத் தக்கவையேயாகும். ''......அதிகாரி விசேஷணம் என்றது அஸங்கதம்'' என்று ஒருபுறமெழுதிவைத்திட்டு, அதிகாரி விசேஷணமென்றுரைத்த ஆசாரியர்களுக்கு இங்ஙனே திருவுள்ளம்'' என்று * ரஸிகமஹித ரங்காஸ்தாந வித்வத்ஸேவா விமலமநஸ்கத்வத்தை வெளியிட்டு அருளிச்செய்து போருமவர். இப்படி ஒன்றன்று, இரண்டன்று. ஸ்ரீமத் வேதாந்ததேசிக க்ரந்தமாலையை அச்சிட்டு வெளியிட்டவனடியேன். அதில் ஒவ்வொரு பங்க்தியையும் மூன்று நான்குவிசை ஸேவிக்க ப்ராப்தமானபடியாலே அந்த ஸ்ரீஸூக்தி ஸாகரத்தில் ஆழமுழ்கினவன். கடல்சூழ்ந்த மண்ணுலகில் அடியேனொருவனேயென்று மார்புதட்டிப் பேச உரிமையுடையேன்.

இந்த ச்லோகமொன்று கேளீர். அபயப்ரதாந ஸாரோபக்ரமத்திலென்று ஞாபகம்.

(ச்லோகம்) ''நமஸ் தஸ்மை கஸ்மைசந பவது நிஷ்கிஞ்சநஜந
ஸ்வயம் ரக்ஷாதீக்ஷா ஸமதிக ஸமிந்தாநயசஸே,
ஸூராதீச ஸ்வைர க்ஷணகு பிதசாபாயுதவதூ
த்ருஷ்த்தா துர்ஜாத ப்ரசமந பதாம்போஜ ரஜஸே''

இந்த சுலோகம் பூர்த்தியாக தேவரீர்களுக்குக் கண்டே கடுவல்லவா? நிஷ்கிஞ்சநஜநரக்ஷாதீக்ஷையும், அதிலும் ஸ்வயம் ரக்ஷாதீக்ஷையும், அதனாலேயே ஸமதிக ஸமிந்தாநயசஸ்கத்வமும் உடையனாக எம்பெருமானை அறிந்துவைத்து ஏதேதோ சொல்லிவருகிறீர்களே, இது நியாயமா? நீதியா?

அதில் உத்தரார்த்தத்தையும் பார்ப்போம். ''திருஸூரபியானாலும் கோத்வம் கழியாதிறே'' என்றார் ரஹஸ்யத்ரய ஸாரத்திலே. பெண்ணுக்குப் பெண்ணுத்வம் கழிந்து கல்லுத்வம் வந்ததாம். கல்லுக்கு கல்லுத்வம் கழிந்து பெண்ணுத்வம் வந்ததாம். ரஹஸ்யத்ரய ஸாரத்திலேயே ''சிலாதே: ஸ்த்ரீத்வாதி:'' என்று ஆதி சப்தகடிதமாகவருளிச்செய்கிறார். பாதுகா ஸஹஸ்ரத்தில் (பதயோ: க்ருத்யாநி பேசுமிடத்து ''யோஷித்பூத த்ருஷந்தி'' என்கிறார் ஸ்வாமி. இவற்றால் ஜாதி கழியுமென்கிறாரா? கழியாதென்கிறாரா? என்று கேட்கிறேன்; ஜிகீஷயாவன்று, ஜிஜ்ஞாஸயாஸவிநயம். ப்ரஸங்காத் இதையும் கேட்டருளவேணும். திருஸூரபியென்கிற ப்ரயோகமே அஸங்கதம். திரு என்னும் தமிழ்ச் சொல்லானது சஷஸஹாதி ஸம்ஸ்க்ருதை காந்த வர்ணங்களோடு சேரவே மாட்டாது, ஒருகாலும் சேராது. ஸ்ரீஸங்கல்ப ஸூர்யோதயமென்றால் உகப்பர்கள்; திரு ஸங்கல்ப ஸூர்யோதயமென்றால் ஹஸிப்பர்கள். ஸ்ரீபாஷ்யமென்றால் ஏற்கும். திருபாஷ்யமென்பாரில்லை. ஸ்ரீசததூஷணி யென்றால் ஏற்கும்; திரு சததூஷணி யென்பாரில்லை. ஸ்ரீஸூதர்சநாழ்வான் என்பார்களேயன்றி திரு ஸூதர்சநாழ்வானென்பாரில்லை. ஆகவே திரு ஸூரபியென்னும் பிரயோகமே அபஹாஸ்யம். (கோத்வம் கழியாது) என்பதற்கு என்ன அர்த்தம் சொல்லலாமென்னில்; மாடுகளுக்கு விரேசனமுண்டானால் ''மாடு கழியறது'' என்பர்கள். அந்தக் கழிதல் வ்யக்திக்குண்டேயல்லது ஜாதிக்கு இல்லை. கோ கழியுமேயொழிய கோத்வம் கழியாது என்றது பொருத்தமே. ''ந சூத்ரா பகவத் பக்தா:'' என்றது போலே ''தேவஸூரபிர் ந கௌ:'' என்றொரு வசனமில்லையே......இத்தகைய விஷயங்களுக்கெல்லாம் ஆர்ஜவத்தோடு விடையளித்துவிட்டால் விஜய பேரியடிக்கத் தடையுண்டோ?

(வெண்பா) மதுராந்தகப் பெரியார் மாண்புடனே தந்த
மதுரார்த்தம் மல்கியநூற் கின்றே—சதிரான
நல்விடையாம் நன்னூலை நல்லார்கள் நன்குகக்க
நல்கினேன் நன்மதியீர் நான்.

பரவாதிசிரோபூஷா முற்றிற்று.